# சக்தி, அத்துடனே வளர்ச்சி

## இரண்டையும் அளிப்பது ஃபெர்ராடால் மட்டும் தான்

- ஃபெர்ராடாலில் உள்ள இரும்புச் சத்தும், இன்சுவையுள்ள மால்ட்டும் வற்றாத சக்தியை வரம்பின்றி வழங்குகின்றன.
- அதிலுள்ள வைட்டமின்களின் சரிவிகிதக் கலவை— ஆரோக்கியமான திட வளர்ச்சிக்கு வழிவகுத்திடுகிறது.

# ஃபெர்ராடால்

**இரும்புச் சத்து, வைட்டமின் டானிக். சுவைத்திட இனியது.**

பார்க்-டேவிஸ் தயாரிப்பு

*ரிஜிஸ்டர்டு டிரேடு மார்க், ரிஜி. யூஸர்ஸ்— பார்க்-டேவிஸ் (இந்தியா) லிட்., பம்பாய்-72 AS.








# கல்கி

பொருளடக்கம்

பரிதாபி, தை 15 — 1973 ஜனவரி 28உ.



சிறுகதைச் சிறப்பு மலர்

பிளவை இந்தப் பசை
போட்டு ஒட்டலாம்!

GUM

தெலுங்கானா

ஜனாதிபதி
ஆட்சி

இந்திரா காந்தி

ஆந்திரா

பொங்கல் பரிசு!

பஸ் போக்குவரத்திலே
போட்டா போட்டி
இருந்தா இந்த மனித
சக்தியெல்லாம் வீணாகக்-

பொங்கலோ
பொங்கல்!
பொங்கலோ
பொங்கல்!

தமிழக அரசு
போக்குவரத்து

மக்கள்

வீணான போட்டா போட்டியைத் தவிர்க்க பஸ் போக்குவரத்து அரசுடைமையாக்கப்பட்டது.
இது தமிழக மக்களுக்குத் தி. மு. க. அரசின் பொங்கல் பரிசு. — முதல்வர்

கல்கி

மலர் 32
இதழ் 26



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
— பாரதியார்

# நினைவிலே நெஞ்சு நனையட்டும்!

**பா**ரதம் குடியரசாகி இருபத்து மூன்று ஆண்டுகள் நிறைவுறுகின்றன. பாரத நாடு குடியரசாகி விட்டது என்று அதிகாரபூர்வமாகப் பிரகடனம் செய்த மகாபுருஷன் இன்று இங்கில்லை. ராஷ்டிரபதி ஒருவரைத் தலைவராகக் கொண்டு இந்தியக் குடியரசு உதயமாவதை, கடைசி கவர்னர் - ஜெனரலான ராஜாஜி தம் வாக்காலேயே பிரகடனம் செய்ய வேண்டும் என அன்றைய பிரதமர் நேருஜி விரும்பி வலியுறுத்தியதின் பேரில் 1950ம் ஆண்டு ஜனவரி 26ந் தேதியன்று குடியரசு ஜனிப்பதை உலகறிய எடுத்தோதினார் நம் ராஜாஜி.

குடியரசு தினத்தின் தனிச் சிறப்பு என்ன என்பதைச் சென்ற ஆண்டில் ராஜாஜி நமக்கு நினைவூட்டினார். 1947 ஆகஸ்ட் 15ந் தேதியன்றே பிரிட்டிஷ் ஆதிக்கத்திலிருந்து பாரதம் விடுதலை பெற்று விட்டது. சுதந்திரம் பெற்ற இந்தியாவின் நிருவாகம் எப்படி நடைபெற வேண்டும் என்று விதிமுறைகளை வகுத்தது நமது அரசியல் நிர்ணய சபை. இந்த விதிமுறைச் சட்டங்களே சுதந்திர பாரதத்தின் அரசியல் மகா சாஸனம் ஆயிற்று. அந்த மகா சாஸனம் அமலுக்கு வந்த தினம்தான் 1950ம் ஆண்டு ஜனவரி 26ந் தேதி. எனவே குடியரசு தினம் என்பதை அரசியல் சாஸன தினம் என்றே குறிப்பிடலாம். நாட்டு நலனை நன்கு உணர்ந்த பேரறிஞர் பலர் ஒன்று சேர்ந்து வகுத்துத் தந்த அந்த மூல சாஸனத்தில் மக்களுக்குத் தரப்பட்டிருக்கும் ஜீவாதார சுதந்திர உரிமைகளைக் கட்டிக் காப்பதுதான் உண்மையில் குடியரசு விழாவாகும். ஒரு யதேச்சாதிகார அரசு மக்களின் சாஸன உரிமைகளைப் பறிப்பதை அனுமதித்து விட்டு, குடியரசு தினம் கொண்டாடுவதில் பொருளே இல்லை என்று கூறினார் ராஜாஜி.

தேசம் பெற்ற சுதந்திரம், ஆள்கிற கட்சிக்கான சுதந்திரமாக மட்டும் இருந்துவிடாமல், மக்கள் அனைவருக்கும் சுதந்திரமாக விளங்க வேண்டும் என்பதற்கே அந்த மகான் இறுதிவரை போராடினார். குடியரசு சாஸனத்தின் ஜீவநாடியைக் காக்கவே தளராது தமது உபதேச ஔஷதத்தை அளித்து வந்த தெய்விக மருத்துவரின் ஜீவநாடி அடங்கிவிட்டது என்று எண்ணும்போது நாம் எத்தனை அநாதையாகிவிட்டோம் என்ற அவல உணர்வு பொங்கி எழுகிறது. சாஸனம் தன் தலையாய காவலனைப் பறி கொடுத்துவிட்டு நிற்கிறது. இந்தக் குடியரசு நாளில், மக்களின் அடிப்படை உரிமைகள் பற்றி மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததொரு வழக்கு சுப்ரீம் கோர்ட்டில் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. முடிவு என்னாகுமோ?

சாஸன உரிமைகள் காக்கப்பட்டால் அதுவே குடியரசு விழாவாகும் என்றார் ராஜாஜி. அதுவே ராஜாஜிக்கு மகத்தான ஞாபகார்த்தமும் ஆகும் என்றும் சொல்லலாம்.

**ம**றைந்த மாமேதைக்கான ஞாபகார்த்தம் குறித்துப் பல யோசனைகள் வெளியிடப்பட்டுள்ளன. உருவப் படம், சிலை, அரங்கம், கட்டிடம் எல்லாம் ஒருபுறமிருக்கட்டும். அவரது கருத்துக்களை நிரந்தரமாகப் பரப்ப ஒரு பரந்து விரிந்த நிறுவனம் வேண்டும் என்று ஸ்ரீ டி. டி. கே. கூறியுள்ள சீரிய யோசனை குறிப்பிடத் தக்கது.

உடனடியாக, நாம் **காரிய உருவத்தில்** செய்து காட்ட வேண்டிய ராஜாஜியின் கருத்துக்கள் இரண்டு உள்ளன. ஒன்று, மதுவிலக்கு. மற்றது அணு ஆயுத ஒழிப்பு. மாநில மட்டத்தில் தோன்றும் மதுவிலக்கு, நானில அடிப்படையில் தோன்றும் அணு ஆயுத பரிகரணம் இரண்டும் மனித குலத்தின் க்ஷேமத்தை உத்தேசித்த மகத்தான பிரச்னைகள். ராஜாஜியின் உண்மையான அபிமானிகளும் அடியார்களும் இவ்விரு பிரச்னைகளுக்காகப் பாடுபட்டு வெற்றி கண்டால் அதுவே அவருக்குத் தலைசிறந்த நினைவாலயமாகும்.

இவ்விரு அம்சங்களில் ராஜாஜியின் உற்ற சகாவும், 'ஸ்வராஜ்யா' ஆசிரியருமான திரு க. சந்தானம் அவர்களின் அரிய கருத்தினை நம் வாசகர்களுக்கு அளிக்கிறோம்: தி. மு. க. அரசு மீண்டும்

மதுவிலக்கினை அமல் செய்தால் அது அக் கட்சிக்கே நன்மை பயக்கும். தி. மு. க. வின் பிடிவாதப் போக்கு எப்படியாயி னும் சரி. திருவாளர்கள் காமராஜ், எம். ஜி. ஆர், ம. பொ. சி, ஏன், கம்யூ னிஸ்ட் கட்சியினரும் கூட மதுவிலக்கை அமல் செய்ய வேண்டும் என்ற அம்சத் தில் தாங்கள் அனைவரும் ஒன்றுகூடுவ தாக அறிவித்து, இந்த ஒரே அடிப் படையில் பொதுத் தேர்தலில் போட்டி யிடுவது பொருத்தமாக இருக்கும்.

அணு ஆயுதப் பிரயோகம் என்கிற அச்சுறுத்தல் மக்கள் குலத்தின் தலைமீது மயிரிழையில் கட்டிவிட்ட கத்தியாகத் தொங்கிக்கொண்டிருக்கிறது. தற்போது வியட்நாமில் அமெரிக்காவின் குண்டு வீச்சு நிறுத்தப்பட்டிருப்பினும், ஒரு சில நாட்களுக்கு முன்புகூட, அவசிய மானால் அங்கு அணுகுண்டு போடு வதைத் தவிர்ப்பதற்கில்லை என்று அமெ ரிக்கத் துணைப் பாதுகாப்பு அமைச்சர் கூறியதை உலகம் மறந்துவிடவில்லை. அணு ஆயுதத்தைப் பிரயோகிப்பது ஒரு புறமிருக்கட்டும். பிரயோகிப்பதாகப் பூச்சாண்டி காட்டி மக்களை அச்சுறுத்து வதே வன்மையான கண்டனத்துக்குரி யது. 'கண்டனம்' என்பது காந்திய வாதிகளுக்கு, ராஜாஜி சீடர்களுக்கு வெறும் வாய்ச் சொல் அல்ல. அது செயலுருவில் அமையும் சத்தியாக்கிர கமே ஆகும். விநோபாஜியின் சர்வோ தய சங்கமோ, அல்லது காந்தி சமா தானக் கழகமோ இதற்கென நூறு சத்தியாக்கிரகத் தொண்டர்களைத் தேர்வு செய்யலாம். அணு ஆயுத பய முறுத்தலை ஓர் அரசாங்கம் முனைப்புடன் மேற்கொண்டால் அப்போது இத் தொண்டர்கள் அதனை எதிர்த்துத் தாங்கள் அனைவரும் சாகும்வரையில் உண்ணாவிரதம் அநுஷ்டிக்கத் தொடங்க வேண்டும். இவ்வாறு ஒரு தொண்டர் பட்டியல் உருவாக்கப்படுமாயின் அதில் தமது பெயரைச் சேர்த்துக் கொள்கிறார் இலட்சிய வீரர் திரு சந்தானம் அவர்கள்.

ராஜாஜியின் அன்பர்கள் இத்தகைய அந்தரங்க சுத்தமான பூரண ஈடுபாட் டுடன் அவரது இலட்சியங்களுக்காகப் பணி புரிவராயின், நினைவாலயங்கள் என்ற ஸ்தூல உருவமின்றியே, ராஜாஜி யின் நினைவு நிரந்தரமாக உறையும். தொண்ணூற்று நான்காவது வயதிலும் கூட, எத்தனை எதிர்ப்பையும் பொருட் படுத்தாது தர்ம யுத்தமே தம் கடமை என வாழ்ந்த புருஷோத்தமனின் நினை வில் நம் நெஞ்சு நனைந்தால் அவர் விட்டுச் சென்ற பணியைத் தொடர அதுவே அருமருந்தாகத் தெம்பும் தெளி வும் ஊட்டி வரும்.

# முதலமைச்சரின் பொங்கல் பரிசு

"பொங்கல் நன்னாளாகிய இன்று மக்கள் மகிழும் வகையில் மேலும் ஒரு சமதர்மத் திட் டத்தைத் தமிழக மக்களுக்குப் பொங்கல் பரிசாக அறிவிக்கிறது நமது அரசு. இன்று வெளியிட்டுள்ள அவசரச் சட்டம் பிரயாணி களுக்கான பஸ் போக்குவரத்து முழுவதை யும் அரசுத் துறைக்கே ஒதுக்குவதற்கும் இந் தாண்டுக் காலத்தில் இந்தத் தேசியமயக் கொள்கையைப் படிப்படியாகச் செயல்படுத்து வதற்கும் வகை செய்கிறது" என்று முத லமைச்சர் தமது பொங்கல் செய்தியில் குறிப் பிட்டிருக்கிறார். உண்மையில் இது பொங்கல் பரிசா, பொங்கல் வேதனையா என்பதை மக்கள்தான் சரியாக உணர முடியும். ஏற் கெனவே மிக மிக மோசமாகச் சேவை செய் யும் அரசு உடைமையான பல்லவா, பாண் டியா, சேரா, சோழா போக்குவரத்துக்களின் கவனக் குறைவான சேவையை அடையாது இருந்த மக்களுக்கும் அதே கவனக் குறை வான சேவையைத் திணித்து அடைவிக்கும் முயற்சியாகவே இது அமையும். மக்கள் மகிழவோ, ஒரு பரிசாக உணரவோ இதில் எதுவும் இல்லை என்பது மக்களுக்கே தெரியும். அரசுடைமையான பஸ்களை நம்பி எந்தப் பயணத் திட்டத்தையும் குறித்த நேரத்தோ டும் வசதியோடும் நடத்த முடியவில்லை என் பது பரவலான அபிப்பிராயமாகிவிட்டது.

தமிழ்நாடு மாநில பஸ் உரிமையாளர் சங்கக் காரியதரிசி திரு கே. வி. ராமாநுஜம், இதன் விளைவாக பஸ் சர்வீஸ் சீர்கெட்டு விடும் என்றும், மாநில பஸ் தேசியமயத்தை விரைவு படுத்துவது என்ற பெயரில் செய்யப்பட்ட இந்தக் காரியம் அரசியல் நோக்கத்தை உடை யது என்றும் அறிக்கை விட்டிருக்கிறார். அவர் கூற்று நியாயம் என்றே படுகிறது. மக்களுக்கு உடனே நன்மை தரக் கூடிய ரூபாய்க்கு மூன்று படி அரிசித் திட்டம், குதிரைப் பந்தய ஒழிப்பு போன்ற தேர்தல் வாக்குறுதிகளை அவசரப்பட்டு நிறைவேற்று மல், மறந்தது போல விட்டு விட்டு மக்களுக்கு எந்த நன்மையும் தராத-'பஸ்களை அரசு மேற் கொள்கிற' — இதை இவ்வளவு அவசரப் பட்டுச் செய்வானேன் என்றே நமக்கும் கேட்கத் தோன்றுகிறது. செய்ததையும் செய்துவிட்டு, 'மக்கள் மகிழும் வகையிலான பொங்கல் பரிசு' என்று இதைச்சௌகரியமாக வருணித்துக் கொள்வதுதான் வேடிக்கையா யிருக்கிறது. 'மக்கள்' என்ற பதம்தான் ஆள் பவர்களுக்கு எப்படியெல்லாம் பயன்படுகிறது! 'பஸ்களைத் தேசியமய மாக்கும் அவசரச் சட் டத்தில் நஷ்டஈடு தருவது சம்பந்தமாகப் பேரம் பேசுவதற்கு உள்ள வாய்ப்பு லஞ் சத்தை வளர்க்கும்' என்று எம். ஜி. ஆர். கூறி யிருப்பதையும் இங்கே கவனிக்க வேண்டும்.

# ராஜாஜியின் ஜெயில் டைரி

**1922 ஜனவரி, 20உ**

வெள்ளிக்கிழமை. இங்குள்ள கைதிகளுடன் இருக்கக் கிடைத்ததை ஓர் அரிய பேறாகக் கருதுகிறேன். பழிக்குப் பழி வாங்கும் நோக்கத்துடன் சிலரை நீதிபதிகள் தனிச் சிறையில் இருக்குமாறு தண்டனை விதித்திருக்கிறார்கள். சிறையின் விதிகளை மீறியதற்காகச் சிலருக்குச் சிறை அதிகாரியே இருட்டான தனிச் சிறையில் இருக்குமாறு தண்டனை விதித்திருக்கிறார். சிறையில் உள்ள அறைகளின் வாசலில் கம்பிக் கதவுதான். ஆனால் இந்தத் தனிச் சிறைத் தண்டனை பெற்றவர்களை அடைக்கும் அறைகளின் அந்தக் கம்பிக் கதவின் மீது ஒரு பலமான பலகைக் கதவை மூடி, காற்றும் ஒளியும் உள்ளே போகாதபடி செய்து விடுகிறார்கள். கதவுக்கு எதிர்ப் பக்கத்துச் சுவரிலுள்ள துவாரமும் கூரையில் காற்றுக்காக வைக்கப்பட்டுள்ள இரண்டு சிறு துவாரங்களும் மட்டுமே உண்டு. காவலாளர்கள் கொஞ்சம் இரக்கமுடையவர்களாயிருக்கிறார்கள். சிறை அதிகாரி வரமாட்டார் என்று எண்ணும் காலங்களில் பலகைக் கதவை மூடாமல் காற்றும் ஒளியும் கிடைக்கச் செய்கிறார்கள்.

என்னையும் இத்தகைய அறைகள் ஒன்றில்தான் வைத்திருக்கிறார்கள். ஆனால் பலகைக் கதவை மூடுவதில்லை. இப்பொழுது ஆம்பூரிலிருந்து வந்துள்ள ஒரு முஸ்லிம் இளைஞரை இந்த விதமாக அடைத்து வைத்திருக்கிறார்கள். ஆண்டவன் அருளிய தேகக் கட்டும் அழகும் திட்சண்யமும் உடையவர். ஆனால் என்னவோ ஆத்திரத்தில் தவறு செய்து விட்டதற்காக அந்த மனிதரை இரவும் பகலும் பூட்டி வைத்திருக்கிறார்கள். மூன்று வேளையும் உணவு உண்ண மட்டும் வெளியே கொண்டு வருகிறார்கள். அதன்பின் கடவுள் தரும் காற்றும் வெளிச்சமும் உள்ளே போகாதபடி அவரை உள்ளே தள்ளிப் பூட்டி விடுகிறார்கள். அவர் அதிர்ஷ்டம், எதிர்ச் சுவரில் உள்ள நீண்ட துவாரத்துக்குக் கம்பி கட்டியிருக்கிறார்களே யன்றிக் கதவு இடவில்லை.

அவர் இருந்து புழங்கும் அறைக்கு அடுத்த அறையில் மாப்பிள்ளை ஜாதியினர் ஒருவரை அடைத்து வைத்திருக்கிறார்கள். கொலைக் குற்றம் செய்தவராம். பத்துவருஷக் கடுங்காவல். அவர் சிறை விதியின்படி ஒரு மாதம் தனிச் சிறை வாசம் அனுபவிக்க வேண்டுமாம். அவருடைய வாசலிலும் பலகைக் கதவை இழுத்து மூடவில்லை.

எனக்கு மற்றப் புறத்தில் சாஸ்திரியாருடைய அறைக்கு அடுத்த அறையில் நான்கு இளைஞர்களுக்கு இரவும் பகலும் விசேஷப் பாரா ஏற்படுத்தியிருக்கிறார்கள். ஆனால் அந்த இளைஞர்களோ கதவடியில் சேர்ந்து உட்கார்ந்து கொண்டு போர்வீரர்கள் மாதிரி குதூகலமாகக் காணப்படுகிறார்கள். தூக்குத் தண்டனை பெற்றவர்கள் கருணை காட்டுமாறு அரசாங்கத்துக்கு விண்ணப்பம் அனுப்புவதுண்டு. அதுபோல் அனுப்பிக் கொண்டும் நாளையும் பொழுதையும் எண்ணிக் கொண்டுமிருக்கிறார்கள்.



நான் காவல்காரர்கள் இல்லாமல் போவதையும் குழாயில் குளிப்பது, தட்டுக் கழுவுவது, ஜலம் கொண்டு வருவது போன்ற காரியங்களை என் இஷ்டம்போல் செய்வதையும், அவர்களைக் கேலி செய்வது போல் தூய வெண்மையான உடையணிந்து போவதையும் பார்த்து அவர்கள் என்னை ஒரு மாதிரியாக முறைக்கிறார்கள்.

என்னுடைய அறைக்குப் பின்புறம் உள்ள அறையிலும் தூக்குத் தண்டனை பெற்றவர்கள் இருப்பதாகத் தெரிகிறது. அவர்கள் பகலும் இரவும் சளசள என்று பேசியும், சதா நேரம் கேலி பேசியும் காலத்தைக் கடத்திக் கொண்டிருக்கிறார்கள். நான் அவர்கள் முகத்தைப் பார்க்கவில்லை. அந்தப் பக்கம் போக அனுமதி கிடையாது. ஆயினும் ஒரே வீட்டில் உள்ளவர்களைப் பற்றி எவ்வளவு நன்றாக அறிவேனோ, அவ்வளவு நன்றாக அவர்களைப் பற்றி அறிவேன்.

# தமிழ் நாட்டிலே...

தீரன்

## சவால் அல்லவா ?

திண்டுக்கல் உபதேர்தல் பற்றித் தமிழ் நாடு முதலமைச்சர் கருணாநிதி மிகவும் முன் னெச்சரிக்கையாகவும் தற்காப்பு உணர்வுட னும் பதில் சொல்லியிருக்கிறார்:

''திண்டுக்கல் லோக சபை உப தேர்தலை நாங்கள் ஒரு சவாலாகவோ பலப் பரீட்சை யாகவோ கருதவில்லை. அதில் ஏற்படும் முடி வைத் தமிழ் மக்களின் தீர்ப்பாகவும் நாங்கள் கருத மாட்டோம். திண்டுக்கல் உபதேர்த லில் தி. மு. க. வுக்கு வெற்றி ஏற்பட்டாலும் தோல்வி ஏற்பட்டாலும் எனது இந்தக் கருத் துப் பொருந்தும்'' — முதல் அமைச்சர் மிக வும் கெட்டிக்காரத்தனமாக இந்தப் பதிலைச் சொல்லி விருப்பதாக நினைக்கலாம். ஆனால் உண்மையில் திண்டுக்கல் லோக சபை உப தேர்தல் பற்றி அவருக்கு இருக்கும் பயத் தையே இந்தப் பேச்சு ஜாடை காட்டுகிறது.

## கொம்பு சீவுதல்

சுற்றுலா வாரியப் பொங்கல் விழாவில் பேசித் தொடக்கவுரை ஆற்றிய தமிழ்நாடு முதல் அமைச்சர் திரு கருணாநிதி, ''தமிழர்கள் நன்றி உணர்வு மிக்கவர்கள். தங்களுக்காக உழைக்கும் ஆடு மாடுகளுக்குக் கூடப் பொங்கல் விழா நடத்துவார்கள். கொம்பு சீவி விட்டு அழகாக்கி அவற்றிற்கு வர்ணம் பூசுகிறவனையே சில மாடுகள் முட்டிவிடும் என் றாலும் தமிழர்கள் என்கிற இனத்தைச் சேர்ந்




தவர்கள் தங்களுடைய நன்றியைத் தெரி விக்க முட்டுகிற மாட்டுக்கும் கொம்பு சீவி, வர் ணம் தீட்டுவார்கள்'' என்று சாதுரியமாகப் பேசியிருக்கிறார். ஆயினும் தமது பலவீனத் தையும் ஊழல் அரசாட்சியையும் மறைப்ப தற்காக முதல்வர் தமிழர்களுக்குக் கொம்பு சீவ முயன்றிருப்பது போலத்தான் இப்பேச்சு அமைந்திருக்கிறது. 'கொம்பு சீவுதல்' என்ற பதத்துக்கு என்ன அர்த்தம் என்பது தமிழர் களுக்கு முதல்வரை விட நன்றாகப் புரியும்.

## வரதட்சிணை கூடாது

தை மாதம் பிறந்ததுமே, கல்யாண மாதங்களின் தொடக்கத்திலேயே சமூக நன் மைக்குப் பயன்படும் ஒரு நல்ல அறிக்கை யைத் தமது பேச்சின் மூலம் காஞ்சிப் பெரியவர்கள் விடுத்திருக்கிறார்கள்.

''நமது இந்து சமய நூல்களில் கூறப்பட் டிருக்கும் எட்டு வகை விவாக முறைகளில் எதிலும் வரதட்சிணை என்பதைப் பற்றிய பேச்சே கிடையாது. பொதுவாக 'வரதட் சிணை' என்ற சொல் வரனிடமிருந்து சிறிது தட்சிணையைப் பெண் வீட்டார் பெற்றுக் கொள்வது என்ற அர்த்தத்தில்தான் குறிப் பிடப்பட்டிருக்கிறது. வரனுக்குப் பொருளோ,



பணமோ கொடுத்துத்தான் ஒரு பெண்ணின் விவாகம் நடந்ததென்று நமது நூல்களில் எங்குமே காண முடியாது. சமீப காலமாக ஆங்கிலப் பட்டப் படிப்பு வந்ததிலிருந்து தான் வரன் செலவு செய்து படித்த படிப்புக் கான முழுச் செலவையும் பெண் வீட்டாரிட மிருந்து மீட்கும் பழக்கம் தொடங்கியிருக் கிறது. முன்பெல்லாம் பெண் வீட்டார், பிள்ளை வீட்டார் இருவருமே கல்யாணச் செலவைப் பகிர்ந்து கொள்வது வழக்கம். இக்காலத்தில் ஆவது போன்ற ஆடம்பரச் செலவுகள் பெண் வீட்டாருக்கு அக்காலத் தில் ஆனது கிடையாது. ஆகவே வரனுக்குப் பணம் கொடுத்துக் கல்யாணம் செய்வது நமது இந்து மதத்துக்கு உகந்தது அல்ல'' என்பது சுவாமிகள் கூறியுள்ள அறிவுரை.

## ஆலங்குடியும் பரமக்குடியும்

தி. மு. க. ஆட்சியில் எதிர்க் கட்சியினரும் தி. மு. க. அல்லாதாரும் போலீஸாராலும், குண்டர்களாலும் எப்படி எப்படி எல்லாம் கொடுமைக்கு ஆளாக முடியும் என்பதை ஆலங்குடி (புதுக்கோட்டை மாவட்டம்) பர மக்குடி (இராமநாதபுரம் மாவட்டம்) ஆகிய இரண்டு ஊர்களும் நிரூபிக்கின்றன. பொய் வழக்குகள், வீடுகள், கடைகளில் புகுந்து தாக்குதல் ஆகிய வன்முறைச் செயல்கள், தி. மு. க. அல்லாதவர்கள் ஆலங்குடியி லிருந்து அகதிகளாக வெளியேறிவிட நேருமோ என்கிற அளவுக்கு அதிகரித்துள் ளனவாம். பரமக்குடியிலும் மாற்றுக் கட்சிக்

## ராஜாஜி சிந்தனை

“உலகம் முழுவதும் ஒழுக்கக் குறைவைப் பார்க்கிறோம். தருமம் குலைந்திருப்பதைப் பார்க்கிறோம். இதைத் தடுக்க வழி ஒன்றே ஒன்றுதான். மனித வாழ்க்கையில் பகவானுக்கும், சமயத்துக்கும் உரிய முக்கியமான ஸ்தானத்தை அவற்றுக்கு மீண்டும் உறுதிப் படுத்தித் தருவதே நமக்கு விமோசனம். கோர்ட்டில் வழக்காடிச் சட்டத்துக்கும் ஒழுங்குக்கும் காப்புத் தர முடியாது. நிரந்தரச் சட்டமாகவும் ஒழுங்காகவும் இருக்கிற பிரபஞ்ச நியதியை நடத்திக் கொண்டிருக்கிற பகவானைத் தஞ்சம் புகுவதே நம்மை ஒழுக்க முள்ளவர்களாக்கிக் கொள்வதற்கு வழி. பகவானுக்கு அடங்கி, உலகத்துக்கு நன்மை பயக்கிற முறையில் வாழ்க்கை நடத்துவதற்காக ஒவ்வொரு சமயமும் தந்திருக்கிற விதிகளே நம்மைத் தருமத்தில் பிணைத்து வைக்கும். தருமத்துக்கும் ஒழுங்குக்கும் காப்பு பக்தியும், சமய நம்பிக்கையுமே ஆகும்.

ஒவ்வொரு ஜீவராசிக்கும் மூச்சுக் காற்று எப்படியோ, அப்படியே உலகினத்துக்கும் பகவானும் சமயமும். சுவாசக் கோளாற்றைச் சரி செய்யாத வரையில் வேறு எத்தனை வைத்தியம் செய்தாலும் பயனேது? இப்போது மனித வாழ்க்கையை உயர்த்துவதற்காகச் செய்கிற அரசியல், பொருளாதாரத் திட்டங்கள் எல்லாம் பக்தி என்கிற சுவாசம் சீராகாவிடில் வியர்த்தமே ஆகும். மனித வாழ்க்கையில் முன்னேறுவதற்குப் பகவான் அவசியமில்லை என்கிற கருத்து நாற்பது ஐம்பது வருஷங்களாக மிகவும் பலமாகப் பிரசாரம் செய்யப் பட்டிருக்கிறது. இதைப் போன்ற துயரகரமான மடமை வேறில்லை. இந்த மடமையை அடியோடு நீக்க வேண்டும். குழந்தைகள் வளர்ந்து உருவாகிற குடும்பம், பள்ளிக்கூடம், கல்லூரி, மற்றும் எல்லா நிறுவனங்களிலும் ஆண்டவன் ஆட்சி ஏற்பட்டாலே எதிர்காலத்தில் விமோசனம் உண்டு என்பதை நம் மக்கள் எல்லோரும் புரிந்து கொண்டு இந்த இலட்சியத்துக்காக உடனே பாடுபட வேண்டும்.

சிறிய உள்ளூர்ச் சண்டையிலிருந்து அணு ஆயுத பரிகரணம் வரையில் எல்லாவற்றுக்கும் தீர்வு பகவானை மக்களின் இதயத்தில் அமர்த்துவதொன்றேயாகும். இதைவிட முக்கியமான 'நிர்மாணத் திட்டம்' எதுவும் இல்லை. வாலிபர்கள் அனைவரும் நிர்மாணப் பணிகளுக் கெல்லாம் மேலான நிர்மாணப் பணி இதுவே என உணர்ந்து, இதில் தங்களை அர்ப்பணித்துக் கொள்ள வேண்டும்.

காரர்களுக்கு” இதே நிலைமைதானும். பொய் வழக்குகளாலும் மிரட்டலாலுமே ஆட்சியை நடத்த முடியும் என்பது இந்த ஊர் நடவடிக்கைகளால் தெரிகிறது என்கிறார்கள். தமிழகம் முழுவதும் ஆலங்குடி, பரமக்குடிகளாக ஆவதற்குள் மக்கள் விழிப்படைய வேண்டும்.

## இயக்கம் தேவை

“தொழிலாளர்களிடையே உள்ள குடியைக் கெடுக்கும் குடிப் பழக்கம் அவர்களது தொழிற் சங்க நடவடிக்கைகளையே பாதித்துள்ளது. தொழிலாளர்களில் பலர் குடிக்கப் போய்விடுவதனால் தொழிற் சங்கக் கூட்டங்களுக்கே வருவதில்லை” என்று ஐ. என். டி. யு. சியைச் சேர்ந்த திரு எஸ். எம். நாராயணன் வருத்தப்பட்டிருக்கிறார். தேசிய சிந்தனையாளர் மன்றத் தொடக்க விழாக் கூட்டத்தில் தொழிலாளர் தலைவர் திரு எஸ். எம். நாராயணன் பேசும்போது, “சிந்தனை ஆற்றலையே மழுங்கச் செய்து விடும் குடிப் பழக்கத்திலிருந்து ஏழை எளிய மக்களை மீட்பதற்காக மீண்டும் மதுவிலக்கை அமுல்படுத்துவதற்கான இயக்கம் ஒன்றை நடத்துவதற்கு அனுமதி தர வேண்டும்” என்று கூட்டத்தில் இருந்த திரு காமராஜ் அவர்களிடம் கோரினார். “விடியற் காலையில் தொழிற் சங்கக் கூட்டம் போட்டாலும், நண்பகலில் போட்டாலும், மாலையில் போட்டாலும், ஷிப்ட் முடிந்தவுடனேயே சாராயக்கடைக்குப் போய் உட்கார்ந்துவிடுகிற தொழிலாளர்களை ஒன்று சேர்ப்பதே கடினமாக இருக்கிறது” என்று தொழிலாளர்களின் நிலைமையைப் பற்றி அவர் கூட்டத்தில் விவரித்தபோது பரிதாபகரமாக இருந்தது.

## தேசிய சிந்தனையாளர் மன்றம்

தேசிய சிந்தனையாளர் மன்றத்தின் தொடக்க விழாவில் டாக்டர் ஹாண்டே பேசும்போது, “நமது மாநிலத்தில் நல்லாட்சி அமைய வேண்டுமானால் காமராஜ் அவர்கள் தலைமையில் அவரது அணியில் சேர்ந்து எல்லாத் தரப்பினரும் அவர் கரங்களை வலுப்படுத்த முன்வர வேண்டும். இந்தத் தேசத்தில் மாற்று ஆட்சி அமைக்கும் வல்லமை காமராஜ் ஒருவருக்கே உண்டு. அகில இந்திய ரீதியில் மாற்று ஆட்சி அமைக்கும் சக்தி வாய்ந்த ஓர் எதிர் அணியை உருவாக்க காமராஜ் பொறுப்பேற்றுச் செயல்பட வேண்டும். அனைத்துக் கட்சியினரையும் அணுகி இதைச் செயல்படுத்தும் திறன் அவர் ஒருவருக்கே உண்டு. படித்தவர்களும், விவரம் தெரிந்தவர்களும் அரசியலில் இருந்து விலகி இராமல், ஒதுங்கிப் போய்விடாமல் லஞ்ச ஊழல் அற்ற ஆட்சி அமையப் பாடுபட வேண்டும். அதற்கான சிந்தனைகளை இம் மன்றம் நாட்டில் வளர்க்க வேண்டும்” என்று பொருத்தமான கருத்துக்களைச் சிறப்பாகச் சொன்னார். சமூக, அரசியல், பொருளாதார, இலக்கியச் சிந்தனைகளைத் தேசிய அடிப்படையில் வளர்க்கும் நோக்கத்தை அடிப்படையாகக் கொண்ட இந்த மன்றம் நல்ல பயன்களைத் தர வாழ்த்துகிறோம்.

# பண்பாட்டின் இதயஸ்தானம்



ஜகத்குரு ஸ்ரீகாஞ்சிகாமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

**ஸ்ரீ பெரியவாகளின் பட்சபாதமற்ற வெள்ளை உள்ளத்தை என்னென்பது? அவர்களே அத்வைத மதகுருவாக இருந்தும்கூட, சமயாசாரியர்களையும்விட மகாகவிக்கே உயர்ந்த இடம் தருகிறார்கள்.**

கலா என்கிற சம்ஸ்கிருத வார்த்தை, கல்வி என்கிற தமிழ்ச் சொல், கல்ச்சர் என்கிற ஆங்கிலப் பதம் எல்லாவற்றுக்கும் மூலம் ஒன்றே. 'கலா' என்றால் எப்போதும் வளருவது என்று பொருள் — சந்திரகலை என்கிறோமே, அதுபோல். பிறை தினந்தோறும் வளர்வது போல் மன வளர்ச்சியைத் தருவது கலை. கலைச் சிறப்பே 'கல்ச்சர்' — 'கலாசாரம்' என்று இதைச் சமீப காலமாகச் சொல்கிறோம். பண்பு, பண்பாடு என்பது பழைய வார்த்தை.

உயர்ந்த எண்ணம் வளர்ந்து வளர்ந்து பல கலைகளாக உருவெடுத்திருக்கிறது. உயர்ந்த எண்ணங்கள் ஒவ்வொருவரிடத்தில் ஒவ்வொரு விதமாக உருவெடுக்கின்றன. சித்திர ரூபமாக, நாட்டிய ரூபமாக, சங்கீத ரூபமாக, காவிய ரூபமாக, தியாக ரூபமாக, சேவை ரூபமாக, தான ரூபமாக — இப்படிப் பல உருவங்களாக உயர்ந்த எண்ணம் வெளிப்படுகிறது. உயர்ந்த எண்ணம் மிகவும் விரிந்து எடுத்துக்கொள்கிற உருவமே, எல்லா உயிர்களிடமும் அன்பு. உலகம் முழுக்க ஒன்றாகிவிட வேண்டும் என்று எண்ணுகிற அன்பில் பிறப்பதே மிகப் பெரிய பண்பாடு.

ஒரு தேசத்தின் பண்புக்கு அளவுகோல் எது? ஒரு நாடு என்று இருந்தால் அதில் எல்லோரும் பண்பாளர்களாக இருக்க முடியாது. திருடன், பொய்யன், மோசக்காரன் எல்லோரும் ஒவ்வொரு தேசத்திலும் இருக்கத் தான் செய்வார்கள். இப்படிப்பட்டவர்கள் இருந்தாலும், 'இந்தத் தேசத்தில் பண்பு இருக்கிறது. கெடுதலானவர்கள் இருந்தாலும் கூட இந்த நாடு பிழைத்துப் போகும்' என்று தெரிந்து கொள்வதற்கு என்ன செய்ய வேண்டும்? ஒரு நோயாளிக்குப் பல கோளாறுகள் இருந்தாலும் டாக்டர் இருதயத்தைச் சோதனை செய்து பார்த்துவிட்டு, 'இருதயம்

யாது. திருடன்,
எல்லோரும் ஒவ்வொரு தேசத்திலும் இருக்கத் தான் செய்வார்கள். இப்படிப்பட்டவர்கள் இருந்தாலும் 'இந்தத் தேசத்தில் பண்பு

இலக்கியகர்த்தர்களில் உயர்ந்தவர்கள், மட்டமானவர்கள் எல்லோரும் இருப்பார்கள். இவர்களில் அகந்தையே இல்லாதவனின் வார்த்தைதான் அழுக்கின் கனம் இல்லாததால் காலப் பிரவாகத்தில் அமுங்காமல், என்றென்றும் மேலேயே விளங்கிக் கொண்டிருக்கும். அப்படிப்பட்டவனின் வாக்கே நமக்குக் கலாசார விஷயங்களில் பிரமாணமாகும்.

மத ஸ்தாபகர்களின் கருத்துக்கு நிரம்ப முக்கியத்துவம் உண்டு என்பது வாஸ்தவம். ஆனாலும் ஒரு மதத்தை ஸ்தாபிப்பது என்று வருகிறபோது பிற மதங்களுடைய கொள்கைகளைக் கண்டனம் செய்து, தங்கள் சித்தாந்தங்களையே உறுதிப்படுத்த வேண்டும் என்று ஏற்பட்டு விடுகிறது. தையல்காரர் மாதிரி, தங்கள் கொள்கையை மட்டும் இறுக்கிப் பிடித்து வைத்துக் கொண்டு, மற்றதை எல்லாம் வெட்டி, தங்கள் கருத்தில் கொஞ்சம் பலவீனமானதற்குக்கூட ஒட்டுக் கொடுத்துத் தைத்துக்கொண்டு போக வேண்டியிருக்கிறது. வெறுமே இலக்கிய சிருஷ்டியில் ஈடுபட்டிருப்பவனுக்கு இந்த வேலை எல்லாம் கிடையாது. மனத்தில் தோன்றியது, கண்ணில் பட்டது, அழகான காட்சி, அழகிய பண்பு இவற்றை விருப்பு வெறுப்பில்லாமல் அவன் சொல்லிக் கொண்டே போவான். 'தனது' என்று எதையும் பிடித்துக் கொள்ளாமல் சர்வ சுதந்திரமாக உள்ளதை உள்ளபடி சொல்வான். உலகம் முழுவதையும் இப்படியே படம் பிடித்துக் காட்டி விடுவான். அதை உலகம் எடுத்துக் கொண்டாலும் சரி, தள்ளிவிட்டாலும் சரி, அதைப் பற்றியும் இலக்கிய கர்த்தாவுக்குக் கவலை இல்லை. முதலில் சொன்னது போல் இவன் அழுக்கே இல்லாமல் சுத்த ஜீவனாக இருந்தால் இவன் 'மனத்தில் தோன்றுவதே உத்தமமான பண்பு. அதை யாருக்கும் பயப்படாமல் சொல்லிவிடுவான். தன் மனத்தில் உத்தமமாகத் தோன்றுவதை

வான். உலகம் முழுவதையும் இப்படியே படம் பிடித்துக் காட்டி விடுவான். அதை உலகம் எடுத்துக் கொண்டாலும் சரி, தன்னி

# பனிக் கால சரும வரட்சியா?
# உங்களுக்கு உள்ள இப் பிரச்சினை
# ரோம், லண்டன், பாரிஸ்
# நங்கையருக்கும் உண்டு

## அவர்கள் கண்ட வழியே உமக்கும் உசிதம்




# பாண்ட்ஸ் கோல்டு க்ரீம்

## உமது சருமத்தை மென்மையாக்கிப் பாதுகாக்கும்

குளிர் நாட்களிலே வரண்டிடும் சரும மென்மையைக் குழைவுடனே உமக்கு மீட்டுத் தருவது பாண்ட்ஸ் கோல்டு க்ரீம்: உலகெங்குமே அரமனையா விரும்பும் அழகுசாதனம் இயற்கை எவ்வாறு செயல்படுகிறதோ அதே முறையில்



உமது சருமத்தைப் பேணிக் காப்பது பாண்ட்ஸ் கோல்டு க்ரீம். வாடாமலரென மென்மையோடு மிளிரத் தேவைப்படும் சருமத் தைலங்களை மீட்டுத் தருகிறது பாண்ட்ஸ் கோல்டு க்ரீம். இட்டுப் பயனடைவீர் இன்றிரவே!

## உலகிலேயே உச்ச விற்பனை உடைய கோல்டு க்ரீம்: பாண்ட்ஸ்

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்க்., (வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் அமெரிக்காவிலே இணைக்கப்பட்டது.)

லிண்டாஸ்- CPC. 3-140 TM.

## 5. மாய மோகினி





# அலை ஓசை

அமரர் கல்கி

உலகமாகிற அரங்க மேடையை மறைப்பதற்கு மெல்லிய இருள் திரை விழுந்து கொண்டிருந்தது.

வானத்தின் வட கிழக்கு மூலையில் கரியமேகங்கள் திரண்டிருந்தன. மேகத்திரளை ஒரு மூலையிலிருந்து இன்னொரு மூலை வரை கிழித்துக் கொண்டு மின்னல் கீற்றுக்கள் ஒரு கணம் ஜொலிப்பதும் மறு கணம் மறைவதுமா யிருந்தன.

வாடைக்காற்று ஜில்லென்று வீசியது. தென்னந் தோப்புகளில் தென்னை மட்டைகள் ஆடி உராய்ந்து மர்மர சத்தத்தை உண்டாக்கின. வயல் வரப்பில் மேய்ந்து விட்டு வீட்டுக்குத் திரும்பிக் கொண்டிருந்த பசு ஒன்று திடீரென்று கன்றை நினைத்துக் கொண்டு ''அம்மா!'' என்று கத்திற்று. பட்டிக்காட்டுச் சங்கீத வித்துவான் ஒருவன்,

''நாளுக்கு நாளுக்கென்
ஜென்மம் கழியுது!
ஞானசபையை எண்ணில்
ஆனந்தம் பொழியுது!''

என்று பாடிக் கொண்டு சென்றான்.

கொஞ்ச தூரத்தில் இன்னொரு இசைப் புலவன் புல்லாங்குழலில் நாட்டக் குறிஞ்சி ராகத்தை வாசிக்க முயற்சி செய்ய, அது புன்னாகவராளியாக உருக் கொள்ளப் பார்த்தது.

சற்றுத் தூரத்திலிருந்த இலுப்பமரத் தோப்பில் ஓர் இராத்திரிப் பறவை, 'கிரீச்.' என்று சப்தமிட்டுவிட்டுச் சடசடவென்று இறகுகளை அடித்துக் கொண்டு ஒரு மரத்தின் உச்சியிலிருந்து இன்னொரு மரத்தின் உச்சிக்குப் பறந்து சென்றது.

வான விதானத்தில் விண்மீன்கள் ஒவ்வொன்றாக வெளியே வந்து எட்டிப் பார்க்கத் தொடங்கின.

*         *         *

சீதாவின் விம்மல் சத்தம் வர வர இலேசாக மறைந்தது.

''அத்தங்கா! வீட்டுக்குப் போகலாமா?'' என்று லலிதா கேட்டாள்.

''லலிதா! எனக்கு வீடு எங்கே இருக்கிறது போவதற்கு?'' என்று சொன்னாள் சீதா.

''நான் உயிரோடிருக்கும் வரையில் என்னுடைய வீடு உன்னுடைய வீடும் தான்!'' என்றாள் லலிதா.

''உன்னுடைய நல்ல மனசை நான் அறிவேன், லலிதா! அதனாலேதான் உன்னைத் தேடி வந்தேன். ஆயினும் பெண்ணாகப் பிறந்தவளுக்கு அது போதுமா? எவ்வளவுதான் பிராண சிநேகிதியாயிருந்தாலும் சொந்த வீட்டில் சுதந்திரமாயிருப்பது போல் இன்னொரு வீட்டில் இருக்க முடியுமா?...''

''ஏன் இருக்க முடியாது? பேஷாய் இருக்கலாம். என்னுடைய தேவப்பட்டணத்து வீட்டில் எனக்கு எவ்வளவு சுதந்திரம் உண்டோ, அவ்வளவு உனக்கும் உண்டு; இன்னும் அதிகமாகக்கூட உண்டு!'' என்றாள் லலிதா.

''உன்னுடைய அன்பு காரணமாக இப்படிச் சொல்கிறாய். நீ சொன்னால் போதுமா? உனக்கு எஜமானர் இருக்கிறார் அல்லவா?''

''இருந்தால் என்ன? அவர் எஜமானர் என்றால் நான் எஜமானி. அவருக்கு வீட்டில் எவ்வளவு பாத்தியதை உண்டோ அவ்வளவு எனக்கும் உண்டு! என்னுடைய எஜமானரின் நல்ல குணம் உனக்குத் தெரியாது, சீதா! என்னைக் காட்டிலும் அவர் உன்னிடம் அதிகப் பிரியமாக இருப்பார். அதிலும் நீ தாய் நாட்டின் சுதந்திரத்துக்காகப் பாடுபட்டாய் என்றும் சிறையிலே இருந்தாய் என்றும் அவருக்குத் தெரிந்தது முதல் உன்னைச் சிலாகித்து எத்தனையோ தடவை பேசியிருக்கிறார். நீ எங்கள் வீட்டில் எத்தனை நாட்கள் இருந்தாலும் அவருக்குச் சந்தோஷமாகவே இருக்கும்!'' என்றாள் லலிதா.

சீதா, தன் தாய் நாட்டின் விடுதலைக்காகச் சிறை போகவில்லை என்றும், தன்னை இன்னொருத்தி என்று நினைத்துத் தவறாகச் சிறைக்கு அனுப்பி விட்டார்கள் என்றும் சொல்லிவிட எண்ணினாள்.

''லலிதா! நீங்கள் எல்லாரும் நினைப்பதுபோல் அப்படியொன்றும் நான் தாய்நாட்டுக்குச் சேவை செய்துவிடவில்லை...'' என்று சீதா சொல்ல ஆரம்பித்தாள்.

''எல்லாம் எனக்குத் தெரியும்! சூரியா அப்போதே எல்லாவற்றையும் விவரமாக எழுதியிருந்தான். ஒன்றுமே செய்யாதவர்கள் எல்லாம் பிரமாதமாகத் தம்பட்டம் அடித்துக் கொள்கிறார்கள். நீ பிரமாதமான காரியத்தைச் செய்துவிட்டு ஒன்றுமில்லை என்று ஏன் சொல்லிக் கொள்ள வேண்டும்? அடக்கத்துக்கும் எல்லை வேண்டாமா?'' என்றாள் லலிதா.

ஓகோ! இவர்கள் எல்லாம் இப்படி நினைப்பதற்குக் காரணம் சூரியாவா? தன்னைப் பெருமைப் படுத்துவதற்காக அவ்விதம் சூரியா எழுதி யிருக்கிறான். அதை இப்போது இல்லை யென்று சொல்லி சூரியாவைக் காட்டிக்கொடுப்பானேன்? தன்னைப் பற்றிச் சிலர் பெருமையாக நினைத்துக் கொண்டால் நினைத்துக்கொண்டு போகட்டுமே? அப்படி நினைப்பதால் யாருக்கு என்ன நஷ்டம்? நான் சொல்ல எண்ணியதைச் சீதா மாற்றிக் கொண்டு, ''மற்றவர்கள் செய்யாத காரியம் அப்படி என்ன நான் பிரமாதமாகச் செய்து விட்டேன்? உன் அகத்துக்காரர் கூடத்தான் சிறையில் இரண்டரை வருடங்களுக்கு மேல் இருந்திருக்கிறார்!'' என்றாள்.

''ஆமாம்; அவர் செய்ததை நினைத்தாலும் எனக்குப் பெருமையாகத்தான் இருக்கிறது!'' என்றாள் லலிதா.

சற்று நேரம் இருவரும் மௌனமாக இருந்தார்கள்.

திடீரென்று லலிதா, ''இதுதான் எனக்கு அர்த்தமாகவே யில்லை. உன்னுடைய இல்வாழ்க்கையில் சந்தோஷமில்லை என்று சொல்கிறாயே? கல்யாணமான புதிதில் நீ எழுதிய கடிதங்களையெல்லாம் பத்திரமாக வைத்திருக்கிறேன். அந்தக் கடிதங்களை நான் அடிக்கடி எடுத்துப் படிப்பதுண்டு. உன்னுடைய கடிதங்களைப் படிக்கும்போது சுவாரஸ்யமான நாவல்களைப் படிப்பது போல அவ்வளவு சந்தோஷமாக இருக்கும். நீ கோபித்துக் கொள்ளாமலிருந்தால் ஒரு விஷயம் சொல்கிறேன். உன்னுடைய கடிதங்களை இவருக்குக்கூட நான் படித்துப் பார்க்கும்படி கொடுப்பதுண்டு...''

''ஐயையோ! என்ன வெட்கக்கேடு! நீ இப்படிச் செய்வாய் என்று தெரிந்திருந்தால் எழுதியிருக்கவே மாட்டேன்!'' என்றாள் சீதா.

''எதற்காக இவ்வளவு பதறுகிறாய்? இப்போது என்ன முழுகிப் போய்விட்டது. உன்னுடைய கடிதங்களைப் படித்து இவர் எவ்வளவோ சந்தோஷப் பட்டிருக்கிறார். இன்னொன்று கூடச் சொல்கிறேன், கேள்! உன்னுடைய கடிதங்களை அவர் படித்ததினால் தான் என்னிடம் அவருடைய அலட்சியம் நீங்கி அன்பாக நடந்துகொள்ளத் தொடங்கினார் என்று எனக்குச் சில சமயம் தோன்றும்.''

''அந்த வரையில் என் கடிதம் உனக்குப் பிரயோஜனமா யிருந்தது பற்றிச் சந்தோஷம்தான்!''

''ஆனால் உன்னுடைய நிலைமை இப்படி ஆகிவிட்டதே என்பதை நினைத்தால் மிகவும் வருத்தமா யிருக்கிறது. அத்தங்கா! அவருக்கு ஏன் அப்படி புத்தி மாறியது! பெண்ணாய்ப் பிறந்தவள் யாரோ ஒருத்தியைப் பற்றிச் சொன்னாயே? அந்தப் பாதகி யார்? அவள் பெயர் என்ன?''

''அவள் பெயர் தாரிணி!''

''தாரிணியா? சூரியா அவளைப் பற்றிக் கூட எழுதியிருந்தானே? அவள் ரொம்ப சாமர்த்தியக்காரி, உபகாரி, அப்படி இப்படி என்று. உன்னுடைய உயிரை ஒரு தடவை அவள் காப்பாற்றினாள் என்று எழுதியிருந்தானே?''

''சூரியா உத்தமமான பிள்ளை. அவனுடைய மனசு ரொம்ப நல்ல மனசு. வெளுத்ததெல்லாம் பால் அவனுக்கு. அதனால் தாரிணியைப் பற்றி 'ஆஹா!' என்கிறான். அவளுடைய உண்மையான குணம் அவனுக்குத் தெரியாது.''

''அப்படியானால் அவள் ரொம்பப் பொல்லாதவளா?'' என்று லலிதா கேட்டபோது சீதா சிறிது நிதானித்து விட்டுக் கூறினாள்:

''தாரிணியைப் பொல்லாதவள் என்று நான் எப்படிச் சொல்ல முடியும்? அவள் எவ்வளவோ நல்லவள்தான். என்னை ஏரியில் முழுகிப் போகாமல் அவள் காப்பாற்றியது உண்மைதான். அது மட்டுந்தானா? கொடிய சுரத்தில் விழுந்து யமனோடு நான் போராடிக் கொண்டிருந்த சமயத்தில் அவள்தான் எனக்கு சிசுருஷை செய்து காப்பாற்றினாள். அவளும் நானும் தனியாக இருக்கும்போது அவளை என் உடன் பிறந்த

சகோதரி என்றே எண்ணத் தோன்றும். உன்னைக் காட்டிலும்கூட அதிகமான அன்பு அவளிடம் எனக்கு உண்டாகும். அவளை விட்டு ஒரு நிமிஷ நேரமும் பிரிந்திருக்க மனம் வராது. வாழும் போது சேர்ந்தாற்போல் வாழ்ந்து சாகிறபோதும் சேர்ந்து சாக வேண்டும் என்று எண்ணிக் கொள்வேன். அந்த மாதிரி அவளிடமே சொல்லியும் இருக்கிறேன். ஆனால் என்னுடைய கணவரின் பக்கத்தில் அவள் நிற்பதைப் பார்த்து விட்டால் என்னுடைய மனசெல்லாம் மாறிவிடும். அவளிடம் எனக்குள்ள அன்பு விஷமாகி விடும். அவர் அவளுடைய முகத்தைப் பார்த்தாலும் போதும்; எனக்கு உடம்பெல்லாம் பற்றி எரியும். அவரும் அவளும் பேசிக் கொள்வதைப் பார்த்தால் எனக்கு வெறி பிடித்து விடும். ஒன்று அவளையாவது கொன்றுவிட வேண்டும் அல்லது நானாவது செத்துப் போய்விட வேண்டும் என்று தோன்றும்...''

''ஐயோ! அத்தங்கா! எவ்வளவு கொடுமையான வார்த்தைகளைப் பேசுகிறாய்? எனக்கு அம்மாதிரி யெல்லாம் மனம் வேறுபடுவதே யில்லை. இவர் யாராவது ஒரு ஸ்திரீயுடன் பேசிக் கொண்டிருப்பதைப் பார்த்தால் எனக்கு அதில் எந்த விதமான வருத்தமோ, கோபமோ உண்டாவதில்லை. உனக்கு மட்டும் ஏன் அப்படிப் பிசகான எண்ணம் தோன்ற வேண்டும்? நீ சொல்வதையெல்லாம் கேட்டால் உன்பேரில் தான் பிசகு என்று எனக்குத் தோன்றுகிறது.''

''லலிதா! நீ பாக்கியசாலி! என்னைப் போல் நீயும் நரக வேதனை அனுபவிக்க வேண்டும் என்று கனவிலும் நான் எண்ண மாட்டேன். அத்தகைய துர்க்கதிக்கு நீ ஆளாகாதபடி கடவுள் உன்னைக் காப்பாற்றட்டும். ஆனால் பிசகெல்லாம் என்பேரில்தான் என்று எண்ணிக்கொண்டு விடாதே! இந்த உலகத்தில் சில அதிசயப் பிறவியான ஸ்திரீகள் இருக்கிறார்கள். அவர்களிடம் ஏதோ ஓர் அபூர்வமான சக்தி இருக்கிறது. அப்படிப்பட்ட வசீகர சக்தியுடைய ஸ்திரீகள் தாங்களே கடவுளுக்கும் தர்மத்துக்கும் பயந்து ஒழுங்காக நடந்து கொண்டால்தான் உண்டு. இல்லாவிட்டால் எத்தனையோ குடும்பங்களை அவர்கள் கெடுத்துக் குட்டிச்சுவராக்கி விட முடியும். தாரிணியைப் பற்றிச் சூரியா எழுதி யிருந்ததாகச் சொன்னாயல்லவா? நீ கோபித்துக் கொள்ளவில்லை என்று வாக்குறுதி கொடுத்தால்



ஒரு விஷயம் சொல்லுகிறேன். சூரியா எவ்வளவோ நல்ல பிள்ளைதானே? ஆனால் அவன்கூட அந்த மாயா மோகினியின் வசீகரத்தில் மயங்கிப்போனவன்தான்!'' என்றாள் சீதா.

''ஒரு விதத்தில் நீ சொல்லுவது எனக்குச் சந்தோஷமாயிருக்கிறது. அண்ணா சூரியாவுக்கும் வயதாகி விட்டது அல்லவா? எத்தனை நாளைக்கு இப்படிப் பிரம்மச்சாரியாகத் திரிந்து கொண்டிருப்பான்? சூரியா கல்யாணம் செய்து கொள்ளாதபடியினால் சுண்டுவின் கல்யாணமும் தடைப்படுகிறது என்று அம்மா ஓயாமல் புலம்பிக் கொண்டிருக்கிறாள். இனிமேல் சூரியா நம்ம பக்கத்துப் பெண்களைக் கல்யாணம் செய்து கொள்ளுவான் என்று எனக்குத் தோன்றவில்லை. சூரியாவுக்கும் நீ சொல்லுகிற அந்தத் தாரிணிக்கும் காதல் என்பது உண்மையானால் அவர்கள் இருவரும் கல்யாணம் செய்து கொள்ளட்டுமே?'' என்று லலிதா கூறிய வார்த்தைகளில் ஆர்வம் ததும்பிக் கொண்டிருந்தது.

''லலிதா! இராத்திரியெல்லாம் இராமாயணம் கேட்டு விட்டு சீதைக்கு ராமர் என்ன வேணும் என்பது போலப் பேசுகிறாயே? காதல் என்பதெல்லாம் வெறும் ஏமாற்றம்!...''

இவ்விதம் சீதா சொல்லிக் கொண்டிருக்கும்போதே சற்றுத் தூரத்தில் காலடிச் சத்தம் கேட்டது. வந்தவன் சூரியாதான்.

''இரண்டு பெண்மணிகள் சேர்ந்து விட்டால் காதலையும் கல்யாணத்தையும் தவிர வேறு பேச்சுக் கிடையாது போலிருக்கிறது. அங்கே, அப்பா உங்களைக் காணோமே என்று தவியாய்த் தவித்துக் கொண்டிருக்கிறார். இரண்டு பேரையும் கையோடு கூப்பிட்டுக் கொண்டு வரச் சொன்னார்!'' என்றான் சூரியா.

## 6. நீர்மேற் குமிழி

கிட்டாவய்யர் மெலிந்து மலினமான குரலில், ''சீதா! உன்னை ரொம்ப நேரமாக எதிர் பார்த்துக்கொண்டிருக்கிறேன். இருட்டி இத்தனை நேரம் வரையிலா குளத்தங்கரையில் உட்கார்ந்திருப்பது? முக்கியமான ஒரு விஷயம் பற்றி உன்னிடம் பேச வேண்டும் என்று சொல்லியிருந்தேனே?'' என்றார்.

''தயவு செய்து மன்னித்துக்கொள்ளுங்கள் மாமா! இன்னும் கொஞ்ச நாளைக்கு இங்கேதானே இருக்கப் போகிறேன்?'' என்று சீதா சமாதானம் கூறத் தொடங்கினாள்.

''இன்னும் கொஞ்ச நாளைக்கு நீ இங்கேயே இருக்கப் போகிறாய் என்பது சரிதான். ஆனால் நான் இருக்க வேண்டுமே உயிரோடு?'' என்றார் கிட்டாவய்யர்.

''ஐயோ! மாமா! இப்படிப் பேசுகிறீர்களே! இந்தப் பாவியின் அதிர்ஷ்டமா இது? நான் அநாதை; திக்கில்லாதவள். நீங்களும் இவ்விதம் என்னிடம் கோபித்துக் கொண்டு பேசுவதாயிருந்தால்...'' என்று கூறிக்கொண்டே சீதா கலகலவென்று கண்ணீரைப் பொழிந்தாள்.

''சீதா! நீ வருத்தப்படாதே! அப்படி நான் சொல்லியிருக்கக் கூடாதுதான். ஏதோ அபசவ்யமாக வாயில் வந்துவிட்டது. போனால் போகட்டும். ஆனாலும் நெருப்பு என்று சொன்னால் வாய் வெந்துவிடுமா என்ன? சாவைக் குறித்து எதற்காக நாம் பயப்பட வேண்டும்? என்றைக்காவது ஒரு நாள் இந்த உலகத்தைவிட்டு எல்லோரும் போக வேண்டியதுதானே! 'நீர்மேற் குமிழி' என்று தெரியாமலா பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள்? 'இன்றைக்கு இருப்பாரை நாளைக்கிருப்பர் என்று எண்ணவோ இடமில்லையே!' என்று தாயுமான சுவாமிகள் அருளிச் செய்திருக்கிறார். இன்றைக்குச் செத்தால் நாளைக்கு இரண்டாம் நாள் ஆகிவிடுகிறது. பட்டினத்தடிகள் என்ன சொல்லியிருக்கிறார்? 'காலன் வருமுன்னே கண் பஞ்சடையுமுன்னே'....''

''மாமா! மாமா! என் பேரில் ஏதோ உங்களுக்குக் கோபம் போலிருக்கிறது. அதனாலேதான் இப்படிப் பேசுகிறீர்கள். கொஞ்ச நாள் இங்கே இருக்கலாம் என்று நினைத்துக் கொண்டு வந்தேன். உங்களைத் தவிர என்னிடம் அன்புள்ளவர்கள் இந்த உலகத்திலேயே யாரும் இல்லை என்று எண்ணிக் கொண்டு வந்தேன். நீங்களும் என்னை வெறுப்பதாகவே தெரிகிறது. நாளைக்கே நான் புறப்பட்டு விடுகிறேன்!''

''சீதா! கொஞ்சம் பொறு! நான் சொல்வதைக் கேட்டுக் கொள்! உன் பேரில் எனக்கு யாதொரு கோபமும் இல்லை; என் பேரிலேதான் கோபம். கொஞ்ச நாளாக நான் படுத்த படுக்கையாயிருக்கிறேன் அல்லவா? படுத்தபடியே யோசித்துக் கொண்டிருக்

# ப்ரூ, பெரிதும் விரும்பப்படுவது ஏன்?

# "ப்ரூதான் ஸ்ட்ராங் தன்மை மற்றும் காபிச்சுவையுடன் மணத்தையும் பெற்றிருக்கிறது"




ப்ரூ-அதிநேர்த்தியான ஸ்ட்ராங்கான இன்ஸ்டண்ட் காபி-விலையும் எவரும் கொடுக்கக்கூடியது

சருமத்திற்கு ஒளியூட்டி மெருகேற்றும் ஸ்நான சோப்...

# ரெக்ஸோனா




சருமப் பராமரிப்புக்கான 5 சத்துக்களின்
கலவையாகிய **கேடில் ப்ளஸ்** அடங்கியது

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

லிண்டாஸ்-RX. 64-140 TM

கிறேன். சில வருஷங்களாக நான் செய்த காரியங்கள் எல்லாம் தப்பு என்று தோன்றிக் கொண்டு வருகிறது. நம் நாட்டுப் பெரியவர்கள் வர்ணாசிரம தர்மம் என்று ஏற்படுத்தியிருக்கிறார்கள். இதில் வர்ணத்தை மாத்திரம் நாம் பிடித்துக் கொண்டிருக்கிறோம். சாதி ஆசாரத்தை அனுஷ்டிப்பதாகச் சொல்கிறோம். அதுவும் எப்படி? நமக்குச் சௌகரியமாயிருக்கும் வரையில்தான்! ஆனால் ஆசிரம தர்மத்தை எத்தனை பேர் அனுஷ்டிக்கிறார்கள்? மனுஷர்களுக்கு ஒரு வயது ஆகிவிட்டால் வானப் பிரஸ்த ஆசிரமத்தை மேற் கொள்ள வேண்டும். எனக்கு அந்த வயது முன்னமே ஆகிவிட்டது. பிள்ளைகள் தலை எடுத்துவிட்டார்கள். பேரன் பேத்திகள் பிறந்து விட்டார்கள். இன்னமும் எதற்காக இந்தக் குடும்ப பாரத்தைச் சுமக்க வேண்டும்? அதனுடைய பலன் என்ன? இந்த ஊர்க்காரர்கள் சிலருடைய துர்ப் புத்தியைக் கேட்டுக் குடிபடைகளின் விரோதத்தையெல்லாம் சம்பாதித்துக் கொண்டேன். என்னுடைய பாட்டனார் காலத்திலிருந்து தலைமுறை தலைமுறையாக இந்தக் குடும்பத்துக்கு உழைத்து வந்த குடிபடைகள் இப்போது என்னிடம் வெட்டுப் பழி, குத்துப் பழியாகத் துவேஷம் கொண்டிருக்கிறார்கள். எத்தனையோ வருஷமாக அவர்கள் கூரைக் குச்சுப் போட்டுக் கொண்டு குடியிருந்த மனைக்கட்டுக்களிலிருந்து அவர்களைத் துரத்தியடித்தேன். கோர்ட்டிலே கேஸ் போட்டு ஜெயித்தேன். என்ன உபயோகம்? தலைமுறை தலைமுறையாக நம் குடும்பத்தை வாழ்த்திக் கொண்டிருந்தவர்கள் இன்று சபித்துக் கொண்டிருக்கிறார்கள். கடைசியாக, இந்த ஆபத்து ஒன்று வந்து சேர்ந்தது. நம்முடைய மூதாதைகள் செய்த பூஜா பலத்தினால் இன்றுவரை உயிர் பிழைத்திருக்கிறேன். அங்கேயே என்னைக் கொன்று போட்டு விடாமல் இந்த மட்டும் உயிரோடு விட்டார்களே! அந்தத் திருடர்கள் நன்றா யிருக்கட்டும்!''

''மாமா! உங்களை அடித்த மகா பாவிகள் நன்றாயிருக்கவா? அவர்கள் நாசமாய்ப் போகவேண்டும். அவர்கள் கை அழுகிப் போக வேண்டும். யாரை வேண்டுமானாலும் நான் மன்னிக்கத் தயார், மாமா! உங்களை அடித்த பாவிகளை மட்டும் மன்னிக்க முடியாது.''

''அவர்களை மன்னிப்பதற்கு நீ யார், அம்மா! அல்லது நான்தான் யார்? அவர்களைக் குற்றம் சொல்லுவதற்குத் தான் நாம் யார்? எய்தவனை விட்டு அம்பை நோவதில் பயன் என்ன? எல்லா உயிர்களிடமும் பகவான் குடி கொண்டிருக்கிறார். அடித்தவர்களிடத்திலும் அந்தக் கடவுள்தான் இருக்கிறார்; அடிபட்டவனிடத்திலும் அதே கடவுள் தான் இருக்கிறார். என்னை அடித்தவர்கள் மீது நான் கோபித்துக் கொண்டால் பகவானையே கோபித்துக் கொண்டதாக அல்லவா ஏற்படும்? உண்மையில், பகவான் என்னை அடித்தவர்களின் உருவத்தில் வந்து எனக்கு ஒரு பாடம் புகட்டியிருக்கிறார். 'வயது அறுபது ஆகப் போகிறதே! உனக்கு இன்னும் இந்த ஊரில் என்ன வேலை? போகிற கதிக்கு வழி தேடிக் கொள்ள வேண்டாமா? இனி மேலும் இந்தச் சம்சார பந்தத்தில் கிடந்து உழலப் போகிறாயா? புத்தி கெட்டவனே!' என்று பகவான் திருடனைப் போல் வந்து எனக்கு உபதேசம் செய்திருக்கிறார். சீதா! எனக்கு இனிமேல் இந்த ஊரிலே இருக்கப் பிரியம் இல்லை. நல்ல வேளையாக நீ வந்த காரணத்தினால் சூரியாவும் வந்திருக்கிறான். அவனிடம் இந்தக் குடும்பப் பொறுப்பை ஒப்படைத்து விட்டு வெளிக் கிளம்பிவிடப் போகிறேன். காசிக்குச் சென்று கங்கையில் ஸ்நானம் செய்ய வேணும். பிரயாகையில் திரிவேணி சங்கமத்தைத் தரிசிக்க வேணும். அப்புறம் ஹரித்வாரம், ரிஷிகேசம், பத்ரிநாத் முதலிய ஸ்தலங்களுக்குப் போக வேண்டும். கைலாச கிரிக்கே போக வேண்டும் என்று ஆசை இருக்கிறது. கொஞ்ச நாளைக்கு முன்பு ஒரு பெரியவர், 'கைலாச யாத்திரை'யைப் பற்றி எழுதியிருந்த ஒரு புத்தகத்தைப் படித்தேன். அதைப் படித்தது முதல் கைலயங்கிரியே எனக்குத் தியானமாயிருந்து வருகிறது.''

''மாமா! நீங்கள் அப்படி யாத்திரை கிளம்புவதாயிருந்தால் என்னுடன் வாருங்கள். நான் அழைத்துக் கொண்டு போகிறேன்!'' என்று சீதா மகிழ்ச்சி ததும்பக் கூறினாள். வாழ்நாளைக் கழிப்பதற்கு ஓர் ஆனந்தமான மார்க்கம் கிடைத்து விட்டதே என்று அவளுடைய உள்ளம் குதூகலித்தது.

''ஆகட்டும், சீதா! உன்னோடு அந்தப் புண்ணிய ஸ்தலங்களுக்கெல்லாம் யாத்திரை போகும் பாக்கியம் எனக்குக் கிடைக்குமானால், அதைக் காட்டிலும் எனக்குச் சந்தோஷமான காரியம் வேறொன்றும் இராது. அதற்காகத்தான் உன்னிடம் இதையெல்லாம் பற்றிச் சொன்னேன். ஆனால் நீயும் நானும் யாத்திரை கிளம்புவதற்கு முன்னால் உன்னுடைய வாழ்க்கையை

நீ செப்பனிட்டுக் கொள்ள வேண்டும்!'' என்றார் இட்டாவய்யர்.

சீதா பதில் ஒன்றும் சொல்லாமல் மௌனமாகத் தலை குனிந்திருந்தாள்.

''நான் எதைப் பற்றிச் சொல்கிறேன் என்பதை நீ தெரிந்து கொண்டாய்; அதனாலேதான் மௌனமாய் இருக்கிறாய். உனக்கும் உன் புருஷனுக்கும் ஒத்துக் கொள்ளவில்லை என்று தெரிந்ததிலிருந்து எனக்கு ஏற்பட்டிருக்கும் மன வேதனையைச் சொல்லி முடியாது. இந்த ஊரிலே உனக்குக் கல்யாணம் நிச்சயமாகி நடந்தது. லலிதாவைப் பார்க்க வந்தவன் உன்னைக் கல்யாணம் செய்து கொள்வேன் என்று சொன்னான். உன் அம்மாமிக்கு வயிறு எரிந்தது. எத்தனையோ பேர் அசூயைப்பட்டார்கள். ஆனால் நான் பரிபூரணமான சந்தோஷமடைந்து லலிதாவுடன் ஒரே பந்தலில் உனக்குக் கல்யாணம் செய்து கொடுத்தேன். இப்படிப்பட்ட பாக்கியம் உனக்குக் கிடைத்ததே என்று எல்லாத் தெய்வங்களுக்கும் நன்றி செலுத்தினேன். அது இப்படி ஆக வேண்டுமா? உன் தாயார்தான் கடைசி வரையில் கஷ்டப்பட்டு வேதனைப்பட்டுச் செத்துப் போனாள். நீயும் அப்படி இருக்க வேணுமா? ஆசைப்பட்டுக் கல்யாணம் செய்து கொண்ட புருஷனுடன் நீ சந்தோஷமாயிருக்கக் கூடாதா? சொல், சீதா!''

''தலைவிதி வேறுவிதமாயிருக்கும் போது நாம் என்ன செய்ய முடியும், மாமா? நீங்கள் எவ்வளவோ சந்தோஷத்துடன் கல்யாணம் செய்து வைத்தீர்கள். நானும் பிரியப்பட்டுத்தான் கல்யாணம் செய்து கொண்டேன். ஆனால் அவருடைய குணம் இப்படியிருக்கும் என்று யார் கண்டது?''

''அவனுடைய குணத்தைப் பற்றிச் சொல்கிறாய். உன்னுடைய குணம் எப்படி என்று யோசித்துப் பார்த்தாயா? பிறத்தியாரிடம் உள்ள குற்றத்தைக் கண்டு பிடித்துச் சொல்வது சுலபம். நம்மிடம் உள்ள குற்றத்தை உணர்வது கஷ்டம். 'இரண்டு கையையும் கொட்டினால்தான் சத்தம்' என்று கேட்டதில்லையா? புருஷன் எவ்வளவுதான் குணம் கெட்டவனாயிருந்தாலும் ஸ்திரீ குணமுடையவளாயிருந்தால் கடைசியில் புருஷனும் சீர்திருந்திவிடுவான். சீர்திருத்த முடியும். சீதா! நீ படித்தவள்; நாலும் அறிந்தவள்; நீ தேசத்துக்குச் செய்த சேவையைப் பற்றிச் சூரியா புகழ்ந்து புகழ்ந்து சொன்னான். அதையெல்லாம் பற்றி எனக்குச் சந்தோஷந்தான். ஆனால் நான் சொல்லும் ஒரு விஷயத்தைக் கேட்டுக் கொள். இந்தியா தேசம் விடுதலை அடைய வேண்டும் என்று நீங்கள் எல்லாரும் பாடுபடுகிறீர்கள். இந்த நாட்டின் முக்கியமான பெருமை என்ன தெரியுமா? உலகத்தில் எத்தனையோ தேசங்கள் சில காலம் மிகவும் மேன்மையோடு இருக்கின்றன; பிறகு அடியோடு அழிந்து போகின்றன. ஆனால் நம்முடைய இந்தியா தேசம் பதினாயிரம் வருஷமாக அழிந்து போகாமலும் மேன்மை குன்றாமலும் இருந்து வருகிறது. மகாத்மா காந்தியைப் போன்ற உத்தம புருஷர்கள் இந்தப் பாரத தேசத்தில் இன்னும் அவதரிக்கிறார்கள். ஏன் தெரியுமா? இந்தத் தேசத்துப் பெண்மணிகளின் மகிமையினால்தான். ஆதிகாலத்திலிருந்து இந்தத் தேசத்தில் புருஷன் எவ்வளவு மூர்க்கனாயும் குணக்கேடனாயுமிருந்தாலும் அவனோடு ஒத்து வாழ்க்கை நடத்துகிறது என்று ஸ்திரீகள் இருந்து வந்தார்கள். அவர்களுடைய புண்ணியந்தான் இந்தப் பாரத தேசத்தைக் காப்பாற்றி வருகிறது. காந்தி மகாத்மா தம்முடைய தர்ம பத்தினி கஸ்தூரிபாவைப் பற்றி எழுதியிருப்பதை நீ படித்திருப்பாய். மகாத்மா காரணமின்றிக் கஸ்தூரிபாவைக் கடிந்து கொண்ட போது அந்த மாதரசி எவ்வளவு பொறுமையாக நடந்து கணவரே பின்னால் பச்சாத்தாபப்படும்படியாகச் செய்திருக்கிறாள்? அவ்வளவு தூரம் போக வேண்டாம். உன்னுடைய மாமியையே எடுத்துக் கொள். ஓயாமல் அவள் என்னிடம் சண்டை பிடிக்கிறாள் என்பது உண்மைதான். ஆனால் காரியாம்சத்தில் என் விருப்பத்தை மீறி அவள் ஏதாவது செய்வதுண்டா? எத்தனையோ தடவை நான் அவளை ரொம்பக் கோபித்துக் கொண்டிருக்கிறேன். அதற்காக அவள் இந்த வீட்டை விட்டுப் போய் விடுகிறேன் என்று எப்போதாவது சொன்னது உண்டா?''

''மாமா! கஸ்தூரிபா தெய்வாம்சம் பொருந்தியவர். மாமி மிகவும் பாக்கியசாலி; உங்களைப் பதியாகப் பெற்றார். ஆனால் நானோ எல்லா விதத்திலும் துர்ப்பாக்கியம் செய்தவள். கல்கத்தாவில் அலிப்பூர் ஜெயிலில் நான் இருந்த காலத்தில் ஒரு வருஷம் இவர் கல்கத்தாவில் இருந்திருக்கிறார். நான் சிறையில் இருப்பது அவருக்குத் தெரியும். ஆனால் ஒரு தடவையாவது அவர் என்னை வந்து பார்க்கவில்லை. அப்படியிருந்தபோதிலும் சிறையிலிருந்து விடுதலை அடைந்ததும் அவரைப் போய்ப் பார்த்துக் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டுக்

கொல்வது என்று எண்ணியிருந்தேன். ஆனால் என்ன ஆயிற்று? நான் விடுதலையாவதற்கு ஒரு மாதத்துக்கு முன்னாலே தான் அவர் சீமைக்குப் புறப்பட்டுப் போய்விட்டார். கல்கத்தாவில் அவர் நடத்திய வாழ்க்கையைப் பற்றி அறிந்த பிறகு எனக்கு அடியோடு புளித்துப் போய்விட்டது. இனி மேல் அவரோடு சேர்ந்து வாழ்வது இயலாத காரியம் என்று தீர்மானித்துவிட்டேன்!''

''அப்படிச் சொல்லாதே, சீதா! கண்ணால் கண்டதும் பொய், காதால் கேட்டதும் பொய், தீர விசாரித்ததே மெய் என்று ஒரு பழமொழி உண்டு. நீ இல்லாத போது நீ கண்ணால் பார்க்காத விஷயங்களைப் பற்றி யாரோ சொன்னதை வைத்துக் கொண்டு ஒன்றையும் முடிவு கட்டக் கூடாது. உன் பேரில் ராகவனுக்குக் கோபம் ஏற்படவும் காரணம் இருக்கிறது. சூரியாவுக்கு நீ வீட்டில் இடம் கொடுத்ததினாலும் பிற்பாடு ஜெயிலுக்குப் போனதினாலும் ராகவனுக்கு உத்தியோகம் போய்விட்டது. உத்தியோகம் என்றால் சாதாரணமான உத்தியோகமா? மாதம் இரண்டாயிரம் ரூபாய் சம்பளம் உள்ள உத்தியோகம். உன்னுடைய காரியத்தினால் அவ்வளவு பெரிய சர்க்கார் உத்தியோகம் போச்சு என்றால் புருஷனுக்குக் கோபமாயிராதா?'' என்றார் கிட்டாவய்யர்.

''அந்த வேலை போனதினால் ஒன்றும் மோசமில்லை, மாமா! அதைவிடப் பெரிய சம்பளத்துடன் அவருக்குப் பாங்கி வேலை கிடைத்திருக்கிறது'' என்றாள் சீதா.

''அது எப்படியிருந்தாலும் சரி. ராகவன் சீமையிலிருந்து வந்தவுடன் அவனை நான் பார்க்கப் போகிறேன். நீயும் என்னுடன் வரவேண்டும். உங்கள் இரண்டு பேருக்கும் மத்தியில் உள்ள தடங்கல்களையெல்லாம் போக்கி மறுபடியும் உங்களைக் குடியும் குடித்தனமுமாகப் பார்த்தால்தான் என் மனம் நிம்மதி அடையும். மறு உலகத்தில் உன் தாயாரின் ஆத்மாவும் சாந்திஅடையும். இருக்கட்டும், சீதா! உன் தகப்பனாரைப் பற்றி யாதொரு தகவலும் இல்லையா?'' என்று கிட்டாவய்யர் கேட்டார்.

''மாமா! எனக்கு அப்பாவைப் பற்றி ஒரு சந்தேகம் இருக்கிறது. அது ஒரு அசுகமான சந்தேகந்தான். உங்களிடம் சொல்லக்கூட என் மனம் தயங்குகிறது. நாக்குக் கூசுகிறது.''

'' என்னிடம் உனக்கு என்ன கூச்சம், அம்மா! என்ன விஷயமிருந்தாலும் தயக்கமில்லாமல் சொல்லு!''

# குருவுக்கு மிஞ்சிய சிஷ்யன்!



ஒரு வயசான காக்கை கூடு கட்டியது. சில நாட்களுக்குப் பின் அந்தக் கிழட்டுக் காக்கையோடு ஒரே ஒரு குஞ்சுக் காக்கை வசித்தது.

ஒரு நாள் அந்த வயசான காக்கை தன் குஞ்சுக்குப் பறக்கக் கற்றுக் கொடுப்பதற்காக ஒரு மைதானத்துக்கு அழைத்துச் சென்றது.

''நீ இனி தானே பறக்கவும் உணவு தேடவும் சக்தியுள்ளதாக ஆகிவிட்டாய். உன்னை அபாயத்திலிருந்து காப்பதற்காக உனக்குச் சில புத்திமதிகளைச் சொல்ல ஆசைப்படுகிறேன்!

''உருளைக் கிழங்கு வயலிலோ தானிய வயலிலோ யாராவது ஒரு மனிதன் தன் பைக்குள்ளோ, கையிலோ ஏதாவது எடுத்து வந்தால் உடனே பறந்துவிடு. அவன் கையில் துப்பாக்கி இருக்கலாம்!''

''எனக்குப் புரிகிறது!'' என்றது காக்கைக் குஞ்சு.

''மற்றொரு புத்திமதி இதுதான்: வயலில் உன்னைக் கண்டதும் ஒருவன் தரையில் குனிந்தால் உடனே பறந்துவிடு. கல்லைத் தூக்கிப் போடக் குறி வைப்பான்! குனியாமலிருந்து கையில் அவன் ஏதும் எடுத்தும் வராவிட்டால் நீ பத்திரமாயிருப்பாய்!'' என்றது வயதான காக்கை.

''நீ சொன்னது சரி! அவன் தன் பாக்கெட்டில் கல்லை மறைத்து வைத்திருந்தால்?'' என்று அந்தக் குஞ்சுக் காக்கை புத்திசாலித்தனமாக வினவியது.

''நீ போகலாம்! என்னைவிட நீ அதிகம் உலகத்தைத் தெரிந்து வைத்திருக்கிறாய்!'' என்றது வயதான காக்கை.

-அயர்லாந்து நாடோடிக் கதை

- பி. எஸ். எம்.

''அப்பா இஸ்லாம் மதத்தில் சேர்ந்து விட்டதாக எனக்குச் சந்தேகம் மாமா!''

''சிவசிவா! கேட்பதற்கே கர்ண கடூரமாயிருக்கிறதே! — எதனால் உனக்கு இப்பேர்ப்பட்ட சந்தேகம் உண்டாயிற்று சீதா?''

'' நானும் அம்மாவும் பம்பாயில் இருந்த போது, ஒரு ஸ்திரீ வந்து எனக்காக ரத்தின ஹாரமும் பணமும் கொடுத்துவிட்டுப் போனது ஞாபகம் இருக்கிறதல்லவா? அம்மா உங்களிடம் அதைப் பற்றிச் சொல்லியிருக்கிறாளே?''

''ஞாபகம் இருக்கிறது. அதற்கும் இதற்கும் என்ன சம்பந்தம்?''

''அந்த ஸ்திரீயை ஒரு சமயம் நான் டில்லியில் பார்த்தேன். அவளுடன் தாடி வளர்த்த சாயபு ஒருவரையும் கண்டேன். என் மனத்தில் ஏதோ ஒரு



"உன்னோடு பெரிய கழுத்தறுப்பாப் போச்சு! நான் எந்த வீட்டுக்குப் போய்த் துணி வசூல் பண்ண நினைக்கிறேனோ, அந்த வீட்டுக்கே நீயும் குடுகுடுகுடுகுடுன்னு போய்த் தொலைக்கிறியே!"

சந்தேகம் உதித்தது. பிறகு நான் டில்லியிலிருந்து கல்கத்தாவுக்குப் போகும் மார்க்கத்தில் ஆக்ராவில். ஒரு பெரிய ஆபத்து எனக்கு வந்தது. ரயிலில் ஒரு பெட்டியை எடுத்ததாகத் திருட்டுக் குற்றம் சாட்டி என்னைக் கோர்ட்டில் கொண்டு போய் நிறுத்தினார்கள். திக்குத் திசை புரியாமல் நான் திகைத்து நின்ற சமயத்தில் ஒரு சாயபு கோர்ட்டுக்கு வந்து அந்தப் பெட்டியை அவர் திருடியதாக ஒப்புக் கொண்டார். அதற்காகத் தண்டனையும் அடைந்தார். எனக்காக அப்பேர்ப்பட்ட தியாகத்தைச் செய்தவர் யாராயிருக்கும் என்று கல்கத்தா சிறையில் வசித்தபோது யோசித்து யோசித்துப் பார்த்தேன். ஒரு வேளை அப்பாவாக இருக்கலாம் என்று தோன்றியது. அப்புறம் யோசிக்க யோசிக்க அவர்தான் என்று உறுதி பெற்றேன்."

"பகவானே! இப்படியும் உண்டா? நீ சொல்வது ஏதோ கதை மாதிரி இருக்கிறதே தவிர, உண்மையாகவே தோன்றவில்லை. துரைசாமிக்கு இப்படிப் புத்தி கெட்டுப் போகும் என்று யாரால் நம்ப முடியும்? ஏதோ ஸ்திரீ விஷயமான சபலம் இருந்தாலும், கொஞ்ச நாளைக்கெல்லாம் விட்டுத் தொலைத்துத் தலை முழுக வேண்டும். அதற்காக மதம் விட்டு மதம் மாறுவார்களா? அதிலும் எப்பேர்ப்பட்ட மதம்? கோயிலை இடிக்க வேண்டும், விக்கிரகத்தை உடைக்க வேண்டும் என்று சொல்லும் மதம்! மத சம்பந்தமான விஷயங்களில் உன் புருஷன் எப்படி, அம்மா?"

"அவருக்கு ஹிந்து மதத்தில் ரொம்பப் பற்று உண்டு. வேறு மதங்களைப் பிடிப்பதேயில்லை. அதிலும் முஸ்லிம் மதம் என்றால் அவருக்கு ரொம்பக் கோபம் வரும். சர்க்கார் உத்தியோகம் பார்த்தபோது அவருக்குக் கீழேயிருந்த துருக்க உத்தியோகஸ்தர்களை அவருக்கு மேலே தூக்கிப் போட்டு விட்டார்களாம். அதனால் அந்த மதத்தின் பேரிலேயே அவருக்கு அசாத்தியமான கோபம்" என்றாள் சீதா.

"பிற மதத்தின் பேரில் கோபத்துக்குக் காரணம் அழகாய்த்தானிருக்கிறது. எப்படியிருந்தாலும் ஹிந்து மதத்தில் பற்று உள்ள வரையில் விசேஷந்தான். அவனை எப்படியாவது நான் திருத்தி விடுகிறேன், பார்! சீதா! கூடிய சீக்கிரம் உன்னுடைய கஷ்டங்கள் எல்லாம் மடிந்துவிடும்" என்றார் கிட்டாவய்யர்.

"மாமா! என்னுடைய கஷ்டங்கள் தீர்ந்துவிடும் என்று சொல்கிறீர்கள்? எனக்கு அப்படித் தோன்றவில்லையே? காரணமில்லாமல் அடிக்கடி மனத்தில் பீதி உண்டாகிறது. அப்போதெல்லாம் மார்பைப் படபடவென்று அடித்துக் கொள்கிறது. அடிவயிற்றை ஏதோ இழுத்துப் பிடிக்கிறது. இராத்திரியில் நிம்மதியான தூக்கம் கிடையாது. மாமா! பயங்கரமான கனவுகள் காண்கிறேன்!" என்றாள் சீதா. அவளுடைய உடம்பு நடுங்கிற்று. கண்ணீர் பெருகிற்று.

இது வரை படுத்துக் கொண்டும் சாய்ந்து கொண்டும் பேசி வந்த கிட்டாவய்யர் எழுந்து உட்கார்ந்தார். சீதாவின் தலையைத் தொட்டுக் கொண்டு, "குழந்தாய்! அதெல்லாம் வீண் பிரமை! ஏதோ பழைய கஷ்டங்களை அநுபவித்த ஞாபகத்தினால் உன் மனம் கொஞ்சம் பேதலித்திருக்கிறது. அப்படிப் பீதி உண்டாகும்போதெல்லாம் ராம ராம என்ற தாரக நாமத்தைச் சொல்லு. பீதி மறைந்துவிடும். மேலும் நான்தான் உன்னுடன் வரப் போகிறேனே! உனக்கு ஒரு கஷ்டமும் வராமல் நான் பார்த்துக் கொள்கிறேன்!" என்றார் கிட்டாவய்யர்.

இந்தச் சமயத்தில் லலிதா அந்த அறைக்குள்ளே வந்தாள். கிட்டாவய்யர் கடைசியில் கூறிய மொழிகளைக் கேட்டுவிட்டு, "அப்பா! இது என்ன? தேவப்பட்டணத்துக்கு என்னுடன் வரப்போவதாகச் சொன்னீர்கள். அதை அரை மணியில் மறந்துவிட்டு இப்போது சீதாவுடன் புறப்பட ஆயத்தம் செய்கிறீர்களே! இந்த பம்பாய் அத்தங்காளிடம் ஏதோ ஒரு வசீகர சக்தி கட்டாயம் இருக்கிறது" என்றாள். (தொடரும்)

# பூட்ஸ் வழங்குகிறது-








# இருமல் மருந்தின் முழுஆற்றலையும் பெற்ற ஒரு வசதியான லாஸன்ஜ்!

## இருமல்-நிவாரணியான செரானாவிலுள்ள நோஸ்கபீன்* இருமல் ஏற்படும் கேந்திரத்திலேயே செயலாற்றுகிறது.



உங்கள் வாயில் செரானா கரையும்போதே, அதன் இதமளிக்கும் இருமல் நிவாரணச் செயல் இரும-லின் கேந்திரஸ்தானத்தையே எட்டிவிடுகிறது. *நோஸ்கபீன்—உலக சுகாதாரஸ்தாபனத்தால் இருமல் சிகிச்சைக்கு சிபாரிசு செய்யப்பட்ட நோஸ்கபீன் இருமல் ஏற்படும் கேந்திரத்திலேயே செயலாற்றி, தூக்கமோ மலச்சிக்கலோ விளை-விக்காமல் இருமலிலிருந்து நிவாரணம் அளிக்கிறது. செரானா கைக்கடக்கமான இருமல் சிகிச்சை மருந்து.

இருமல் — நிவாரணி

**செரானா**-லாஸன்ஜ்




கைக்கடக்கமான இருமல் சிகிச்சை மருந்து

CMBC-51-202 TM



# செவ்வாழை

### அறிஞர் அண்ணா

செங்கோடன், அந்தச் செவ்வாழைக் கன்றைத் தன் செல்லப் பிள்ளைபோல் வளர்த்து வந்தான். இருட்டுகிற நேரம் வீடு திரும்பினாலும்கூட, வயலிலே அவன் பட்ட கஷ்டத்தைக்கூடப் பொருட்படுத்தாமல், கொல்லைப்புறம் சென்று, செவ்வாழைக் கன்றைப் பார்த்துவிட்டு, தண்ணீர் போதுமானபடி பாய்ச்சப்பட்டு இருக்கிறதா என்று கவனித்துவிட்டுத்தான், தன் நான்கு குழந்தைகளிடமும் பேசுவான். அவ்வளவு பிரேமையுடன் அந்தச் செவ்வாழையை அவன் வளர்த்து வந்தான். கன்று வளர வளர அவன் களிப்பும் வளர்ந்தது. செவ்வாழைக்கு நீர் பாய்ச்சும்போதும், கல் மண்ணைக் கிளறிவிடும் போதும், அவன் கண்கள் பூரிப்படையும் மகிழ்ச்சியால். கரியனிடம் — அவனுடைய முதல் பையன்—காட்டியதைவிட அதிகமான அன்பும், அக்கறையும் காட்டுகிறாரே என்று ஆச்சரியம், சற்றுப் பொறாமைகூட ஏற்பட்டது, குப்பிக்கு.

'' குப்பி! ஏதாச்சும் மாடு கீடு வந்து வாழையை மிதிச்சுவிடப் போகுது. ஜாக்கிரதையாக் கவனிச்சுக்கோ. அருமையான கன்று — ஆமாம், செவ்வாழைன்னு சாமான்யமில்லே. குலை, எம்மாம் பெரிசா இருக்கும் தெரியுமோ? பழம், வீச்சு வீச்சாவும் இருக்கும், உருண்டையாகவும் இருக்கும் — ரொம்ப ருசி — பழத்தைக் கண்ணுலே பார்த்தால்கூடப் போதும், பசியாறிப் போகும்'' என்று குப்பியிடம், பெருமையாகப் பேசுவான் செங்கோடன்.

அப்பா சொல்லுவதை நாலு பிள்ளைகளும் ஆமோதிப்பார்கள் — அது மட்டுமா — பக்கத்துக் குடிசை, எதிர்க் குடிசைகளிலே உள்ள குழந்தைகளிடமெல்லாம், இதே பெருமையைத்தான் பேசிக் கொள்வார்கள். உழவர் வீட்டுப் பிள்ளைகள், வேறு எதைப் பற்றிப் பேசிக் கொள்ள முடியும் — அப்பா வாங்கிய புதிய மோட்டாரைப் பற்றியா, அம்மாவின் வைரத்தோடு பற்றியா, அண்ணன் வாங்கி வந்த ரேடியோவைப் பற்றியா, எதைப் பற்றிப் பேச முடியும்? செவ்வாழைக் கன்றுதான், அவர்களுக்கு, மோட்டார், ரேடியோ, வைரமாலை சகலமும்!

மூத்த பயல், கரியன், 'செவ்வாழைக் குலை தள்ளியதும், ஒரு சீப்புப் பழம் எனக்குத்தான்' — என்று சொல்லுவான்.

'' ஒண்ணுகூட எனக்குத் தரமாட்டாயாடா — நான் உனக்கு மாம்பழம் தந்திருக்கிறேன், கவனமிருக்கட்டும் — வறுத்த வேர்க்கடலை கொடுத்திருக்கிறேன், கவனமிருக்கட்டும் '' — என்று எதிர்க் குடிசை எல்லப்பன் கூறுவான்.

கரியனின் தங்கை, காமாட்சியோ, கண்ணைச் சிமிட்டிக் கொண்டே, ''உனக்கு ஒரு சீப்புன்னு, எனக்கு இரண்டு தெரியுமா?— அம்மாவைக் கேட்டு ஒரு சீப்பு, அப்பாவைக் கேட்டு ஒரு சீப்பு — '' என்று குறும்பாகப் பேசுவாள்.

மூன்றாவது பையன், முத்து, ''சீப்புக் கணக்குப் போட்டுக்கிட்டு ஏமாந்து போகாதிங்க— ஆமாம் — பழமாவதற்குள்ளே யாரார் என்னென்ன செய்துடுவாங்களோ, யாரு கண்டாங்க'' என்று சொல்லுவான் — வெறும் வேடிக்கைக்காக அல்ல — இருடியாவது மற்றவர்களைவிட அதிகப்படியான. பழங்களைத் தின்றே தீர்த்துவிடுவது என்று தீர்மானித்தே விட்டான்.

செங்கோடனின் செல்லப் பிள்ளையாக வளர்ந்து வந்தது செவ்வாழை. உழைப்பு அதிகம், வயலில், பண்ணை மானேஜரின் ஆர்ப்பாட்டம் அதிகம். இவ்வளவையும் சகித்துக் கொள்வான் — செவ்வாழையைக் கண்டதும் சகலமும் மறந்து போகும். குழந்தைகள் அழுதால், செவ்வாழையைக் காட்டித்தான் சமாதானப்படுத்துவான்! துஷ்டத்தனம் செய்கிற குழந்தையை மிரட்டவும், செவ்வாழையைத்தான் கவனப்படுத்துவான்! குழந்தைகள் பிரியமாகச் சாப்பிடுவார்கள், செவ்வாழையை என்ற எண்ணம் செங்கோடனுக்கு. பண்ணை வீட்டுப் பிள்ளைகள், ஆப்பிள், திராட்சை தின்ன முடிகிறது — கரியனும் முத்துவும், எப்படி விலை உயர்ந்த அந்தப் பழங்களைப் பெற முடியும்? செவ்வாழையைத் தந்து தன் குழந்தைகளைக் குதூகலிக்கச் செய்ய வேண்டும் என்ற எண்ணந்தான், செங்கோடனை, அந்தச் செவ்வாழைக் கன்றைச் செல்லமாக வளர்க்கும்படி செய்தது. உழவன் செங்கோடனிடம் எவ்வளவு பாடு பட்டாலும், குழந்தைகளுக்குப் 'பழமும் பட்சணமும்' வாங்கித் தரக்கூடிய 'பணம்' எப்படிச் சேர முடியும்? கூலி நெல், பாதி வயிற்றை நிரப்பவே உதவும் — குப்பியின் 'பாடு' குடும்பத்தின் பசியைப் போக்கக் கொஞ்சம் உதவும். இப்படிப் பிழைப்பு! உழைப்பின் பெரும் பகுதி வயலிலே செலவாகிறது — அதன் பலனில் மிகப் பெருக்

பகுதியோ, பண்ணைக்குச் சேர்ந்துவிடுகிறது. இந்தச் 'செவ்வாழை' ஒன்றுதான், அவன் சொந்தமாக — மொத்தமாக, பலன் பெறுவதற்கு உதவக்கூடிய உழைப்பு! இதிலே, பங்கு பெற, பண்ணையார் குறுக்கிட முடியாதல்லவா? அவருக்காகப் பாடுபட்ட நேரம் போக, மிச்சமிருப்பதிலே, அலுத்துப் படுக்க வேண்டிய நேரத்திலே, பாடுபட்டு, கண்ணைப் போல் வளர்த்து வரும், செவ்வாழை! இதன் முழுப் பயனும் தன் குடும்பத்துக்கு! இது ஒன்றிலாவது தான் பட்ட பாட்டுக்கு உரிய பலனைத் தானே பெற முடிகிறதே என்ற சந்தோஷம் செங்கோடனுக்கு.

இவ்வளவும் அவன் மனத்திலே, தெளிவாகத் தோன்றிய கருத்துக்கள் அல்ல. புகைப் படலம் போல, அந்த எண்ணம் தோன்றும், மறையும் — செவ்வாழையைப் பார்க்கும் போது பூரிப்புடன்பெருமையும் அவன் அடைந்ததற்குக் காரணம் இந்த எண்ணந்தான்.

கன்று, வளர்ந்தது, கள்ளங்கபடமின்றி. செங்கோடனுக்குக் களிப்பும் வளர்ந்தது.

செங்கோடனின் குழந்தைகளுக்கு இப்போது, விளையாட்டு இடமே, செவ்வாழை இருந்த இடந்தான்! மலரிடம் மங்கையருக்கும், தேனிடம் வண்டுகளுக்கும், ஏற்படும் பிரேமை போல், அந்தக் குழந்தைகளுக்குச் செவ்வாழையிடம், பாசம் ஏற்பட்டுவிட்டது.

''இன்னும் ஒரு மாசத்திலே குலை தள்ளுமாப்பா? — கரியன் கேட்பான், ஆவலுடன், செங்கோடனை.

''இரண்டு மாசமாகும்டா கண்ணு!'' என்று செங்கோடன் பதில் அளிப்பான்.

செவ்வாழை குலை தள்ளிற்று — செங்கோடனின் நடையிலேயே ஒரு புது முறுக்கு ஏற்பட்டுவிட்டது. நிமிர்ந்து பார்ப்பான், குலையை, பெருமையுடன்.

குலை முற்றமுற்ற, செங்கோடனின் குழந்தைகளின் ஆவலும், சச்சரவும், பங்குத் தகராறும்

**செங்கோடன் ஆசையோடு வைத்தான் செவ்வாழை! அதைச் சுற்றிப் பச்சை உள்ளங்களைப் படரவும் விட்டான்! கடைசியில் அவனுக்கோ அவன் குழந்தைகளுக்கோ ஒரு பழம் கிடைத்ததா?— அட்டைப் படம் கூறும் கதையை அழகாகச் சொல்லிப் போகிறார் பிப்ரவரியில் பிரிந்துபோன சி. என். அண்ணாதுரை.**



அப்பாவிடமோ அம்மாவிடமோ 'அப்பீல்' செய்வதும், ஓங்கி வளரலாயிற்று. ''எப்போது பழமாகும்?'' — என்று கேட்பாள் பெண். 'எத்தனை நாளைக்கு மரத்திலேயே இருப்பது?' என்று கேட்பான் பையன். செங்கோடன், பக்குவமறிந்து குலையை வெட்டி, பதமாகப் பழுக்க வைத்துப் பிள்ளைகளுக்குத் தரவேண்டும் என்று எண்ணிக் கொண்டிருந்தான். உழைப்பின் விளைவு ! முழுப் பலனை நாம் பெறப் போகிறோம் — இடையே தரகர் இல்லை — முக்காலே மூன்று வீசம் பாகத்தைப் பறித்துக் கொள்ளும் முதலாளி இல்லை. உழைப்பு நம்முடையது என்றாலும் உடைமை பண்ணையாருடையது—அவர் எடுத்துக் கொண்டது போக மீதம்தானே நமக்கு என்று, வயலில் விளையும் செந்நெல்லைப் பற்றி எண்ண வேண்டும் — அதுதானே முறை! ஆனால் இந்தச் செவ்வாழை அப்படி அல்ல ! உழைப்பும் உடைமையும் செங்கோடனுக்கே சொந்தம் !

இரண்டு நாட்களில், குலையை வெட்டி விடத் தீர்மானித்தான் — பிள்ளைகள் துள்ளினர் சந்தோஷத்தால். மற்ற உழவர் வீட்டுப் பிள்ளைகளிடம் 'சேதி' பறந்தது — பழம் தர வேண்டும் என்று சொல்லி, அவலோ, கடலையோ, கிழங்கோ, மாம்பிஞ்சோ, எதை எதையோ, 'அச்சாரம்' கொடுத்தனர், பல குழந்தைகள், கரியனிடம்.

பாடுபட்டோம், பலனைப் பெறப் போகிறோம். இதிலே ஏற்படுகிற மகிழ்ச்சிக்கு ஈடு எதுவும் இல்லை. இதைப் போலவே, வயலிலும் நாம் பாடுபடுவது நமக்கு முழுப் பலன் அளிப்பதாக இருந்தால் எவ்வளவு இன்பமாக' இருக்கும். செவ்வாழைக்காக நாம் செலவிட்ட உழைப்பு, பண்ணையாரின் நிலத்துக்காகச் செலவிட்ட உழைப்பிலே, நூற்றுக்கு ஒரு பாகம்கூட இராது — ஆனால் உழைப்பு நம்முடையதாகவும் வயல் அவருடைய உடைமையாகவும் இருந்ததால், பலனை அவர் அனுபவிக்கிறார் பெரும் பகுதி. இதோ இந்தச் செவ்வாழை நம்ம கொல்லையிலே நாம் உழைத்து வளர்த்தது — எனவே பலன் நமக்குக் கிடைக்கிறது — இதுபோல், நாம் உழைத்துப் பிழைக்க நம்முடையது என்று ஒரு துண்டு வயல் இருந்தால், எவ்வளவு இன்பமாக இருக்கும். அப்படி ஒரு காலம் வருமா ! உழைப்பவனுக்குத்தான் நிலம் சொந்தம்—பாடுபடாதவன் பண்ணையாராக இருக்கக் கூடாது என்று சொல்லும் காலம் எப்போதாவது வருமா ! என்றெல்லாம்கூட, இலேசாகச் செங்கோடன் எண்ணத் தொடங்கினான். செவ்வாழை இதுபோன்ற சித்தாந்தங்களைக் கிளறிவிட்டது அவன் மனத்தில். குழந்தைகளுக்கோ நாக்கிலே நீர் ஊறலாயிற்று.

செங்கோடன் செவ்வாழைக் குலையைக் கண்டு களித்திருந்த சமயம், பண்ணை பரந்தாமர், தமது மருமகப் பெண் முத்துவிஜயத்தின் பிறந்த நாள் விழாவை விமரிசையாகக் கொண்டாட ஏற்பாடுகள் செய்து கொண்டிருந்தார். அம்பிகை கோயிலில் அபிஷேக ஆராதனை செய்வதற்காக, 'ஐயரிடம்' சொல்லிவிட்டார். கணக்கப்பிள்ளையைக் கூப்பிட்டு, 'பட்டி' தயாரிக்கச் சொன்னார். பல பண்டங்களைப் பற்றிக் குறிப்பு எழுதும்போது 'பழம்' தேவை என்று தோன்றாமல் இருக்குமா? இரண்டு சீப்பு வாழைப் பழம் — என்றார் பண்ணையார்.

''ஏனுங்க பழம் — கடையிலே நல்ல பழமே இல்லை—பச்சை நாடாளுகத்தான் இருக்கு'' என்று இழுத்தான் சுந்தரம், கணக்கப்பிள்ளை.

''சரிடா, அதிலேதான் இரண்டு சீப்பு வாங்கேன்? வேறே நல்ல பழம் எங்கே இருக்கு!'' என்று பண்ணையார் சொல்லி முடிப்பதற்குள், சுந்தரம், ''நம்ம செங்கோடன் கொல்லையிலே தரமா, ஒரு செவ்வாழைக் குலை இருக்குதுங்க — அதைக் கொண்டுவிட்டு வரலாம்'' என்றான். ''சரி'' என்றார் பண்ணையார்.

செங்கோடனின் செவ்வாழைக் குலை! அவனுடைய இன்பக் கனவு!! உழைப்பின் விளைவு! குழந்தைகளின் குதூகலம் !!

அதற்கு மரண ஓலை தயாரித்து விட்டான் சுந்தரம் !

எத்தனையோ பகல் பார்த்துப் பார்த்து, செங்கோடனின் குடும்பம் முழுதும் பூரித்தது அந்தக் குலையை ! அதற்குக் கொலைகாரனானான் சுந்தரம். மகிழ்ச்சி, பெருமை, நம்பிக்கை, இவைகளைத் தந்து வந்த, அந்தச் செவ்வாழைக் குலைக்கு வந்தது ஆபத்து.

தெருவிலே, சுந்தரமும் செங்கோடனும் பேசும்போது குழந்தைகள், செவ்வாழையைப் பற்றியதாக இருக்கும் என்று எண்ணவே இல்லை ! செங்கோடனுக்குத் தலை கிறுகிறுவென்று சுற்றிற்று — நாக்குக் குழறிற்று — வார்த்தைகள் குபுகுபுவென்று கிளம்பி, தொண்டையில் சிக்கிக் கொண்டன.

மாட்டுப் பெண்ணுக்குப் பிறந்த நாள் பூஜை—என்று காரணம் காட்டினான் சுந்தரம். என்ன செய்வான் செங்கோடன் ! என்ன சொல்வான்? அவன் உள்ளத்திலே, வாழையோடு சேர்ந்து வளர்ந்த ஆசை — அவன் குழந்தைகளின் நாக்கிலே நீர் ஊறச் செய்த ஆசை — இன்று, நாளை, என்று நாள் பார்த்துக் கொண்டிருந்த ஆவல் — எனும் எதைத்தான் சொல்ல முடியும்? கேட்பவர் பண்ணை பரந்தாமர்! 'எவ்வளவு அம்பனடா, வாழைக் குலையை வாய் திறந்து, உன்னை ஒரு பொருட்டாக மதித்துக் கேட்டு அனுப்பினால், முடியாது என்று சொல்லிவிட்டாயே! அவருடைய உப்பைத் தின்று பிழைக்கிறவனுக்கு, இவ்வளவு நன்றிகெட்டதனமா? கேவலம் ஒரு வாழைக் குலை! அவருடைய அந்தஸ்துக்கு, இது ஒரு பிரமாதமா!'— என்று ஊர் ஏசுகிறது போல், அவன் கண்களுக்குத் தெரிகிறது.

'அப்பா! ஆசை காட்டி மோசம் செய்யாதே! நான்கூடத்தான் தண்ணீர் பாய்ச்சினேன் — மாடு மிதித்து விடாதபடி பாதுகாத்தேன் — செவ்வாழை ரொம்ப ருசியாக இருக்கும். கல்கண்டு போல் இருக்கும் என்று நீதானே என்னிடம் சொன்னாய். அப்பா ! தங்கச்சிக்குக்கூட, 'உசிர்' அந்தப் பழத்திடம். மரத்தை அண்ணாந்து பார்க்கும் போதே, நாக்கிலே நீர் ஊறும். எங்களுக்குத் தருவதாகச் சொல்லிவிட்டு, இப்போது ஏமாற்றுகிறாயே. நாங்கள் என்னப்பா, உன்னை, கடையிலே காசு போட்டுத் திராட்சை, கமலாவா

வாங்கித் தரச் சொன்னோம். நம்ம கொல்லையிலே நாம் வளர்த்ததல்லவா!'— என்று அழுகுரலுடன் கேட்கும் குழந்தைகளும், 'குழந்தைகளைத் தவிக்கச் செய்கிறீயே, நியாயமா' என்று கோபத்துடன் கேட்கும் மனைவியும், அவன் மனக் கண்களுக்குத் தெரிந்தனர்! எதிரே நின்றவரோ பண்ணை கணக்கப் பிள்ளை! அரிவாள் இருக்குமிடம் சென்றான். 'அப்பா, குலையை வெட்டப் போறாரு—செவ்வாழைக் குலை'—என்று ஆனந்தக் கூச்சலிட்டுக் கொண்டு, குழந்தைகள் கூத்தாடின; செங்கோடனின் கண்களிலே நீர்த் துளிகள் தளும்பின! குலையை வெட்டினான் — உள்ளே கொண்டு வந்தான் — அரிவாளைக் கீழே போட்டான்—'குலையைக் கீழே வை அப்பா, தொட்டுப் பார்க்கலாம்' என்று குதித்தன குழந்தைகள். கரியனின் முதுகைத் தடவினான் செங்கோடன். ''கண்ணு! இந்தக் குலை, நம்ம ஆண்டைக்கு வேணுமாம். கொண்டு போகிறேன் — அழாதீங்க — இன்னும் ஒரு மாசத்திலே, பக்கத்துக் கன்று மரமாகிக் குலை தள்ளும், அதை உங்களுக்குக் கட்டாயமாகக் கொடுத்துவிடறேன்'' என்று கூறிக் கொண்டே வீட்டை விட்டுக் கிளம்பினான், குழந்தைகளின் அழுகுரல், மனத்தைப் பிளப்பதற்குள்.

செங்கோடன் குடிசை அன்று பிணம் விழுந்த இடம் போலாயிற்று. இரவு நெடு நேரத்துக்குப் பிறகுதான் செங்கோடனுக்குத் துணிவு பிறந்தது வீட்டுக்கு வர! அழுது அலுத்துத் தூங்கிவிட்ட குழந்தைகளைப் பார்த்தான். அவன் கண்களிலே, குபுகுபுவெனக் கண்ணீர் கிளம்பிற்று. துடைத்துக் கொண்டு, படுத்துப் புரண்டான் — அவன் மனத்திலே ஆயிரம் எண்ணங்கள். செவ்வாழையை, செல்லப் பிள்ளைபோல் வளர்த்து, என்ன பலன்....!

அவருக்கு அது ஒரு பிரமாதமல்ல—ஆயிரம் குலைகளையும் அவர் நினைத்த மாத்திரத்தில் வாங்க முடியும்! ஆனால் செங்கோடனுக்கு...? அந்த ஒரு குலையைக் காண அவன் எவ்வளவு பாடுபட்டான் — எத்தனை இரவு அதைப் பற்றி இன்பமான கனவுகள் — எத்தனை ஆயிரம் தடவைகள், குழந்தைகளுக்கு ஆசை காட்டியிருப்பான்! உழைப்பு எவ்வளவு! அக்கறை எத்தனை! எல்லாம் ஒரு நொடியில் அழிந்தன!!

நாலு நாட்களுக்குப் பிறகு, வெள்ளித் தட்டிலே, ஒரு சீப்பு செவ்வாழைப் பழத்தை வைத்துக் கொண்டு, அன்னநடை நடந்து அழகுமுத்து விஜயா, அம்பிகை ஆலயத்துக்குச் சென்றாள்.

நாலு நாட்கள் சமாதானம் சொல்லியும், குழந்தைகளின் குமுறல் ஓயவில்லை. கரியன் ஓரே பிடிவாதம் செய்தான், ஒரு பழம் வேண்டுமென்று. குப்பி, பழங்கலயத்திலிருந்து ஒரு காலணாவை எடுத்துக் கொடுத்தனுப்பினாள், பழம் வாங்கிக் கொள்ளச் சொல்லி. பறந்தோடினான் கரியன்.

கடையிலே, செவ்வாழைச் சீப்பு, அழகாகத் தொங்கிக் கொண்டிருந்தது. கணக்கப்பிள்ளை பண்ணை வீட்டிலே இருந்து நாலு சீப்பு முதலிலேயே எடுத்து வந்து விட்டான் — அவன் விற்றான் கடைக்காரனுக்கு — அதன் எதிரே ஏக்கத்துடன் நின்றான் கரியன்! ''பழம், ஒரு அணாடா, பயலே — காலணாவுக்குச் செவ்வாழை கிடைக்குமோ — போடா—'' என்று விரட்டினான் கடைக்காரன். கரியன் அறிவானா பாவம், தன் கொல்லையிலே இருந்த செவ்வாழை, இப்போது கடையில் கொலுவீற்றிருக்கிறது என்ற விந்தையை! பாவம்! எத்தனையோ நாட்கள், அந்தச் சிறுவன், தண்ணீர் பாய்ச்சினான், பழம் கிடைக்கும் என்று! பழம் இருக்கிறது, கரியனுக்கு எட்டாத இடத்தில்! விசாரத்தோடு வீட்டுக்கு வந்தான், வறுத்த கடலையை வாங்கிக் கொறித்துக் கொண்டே. செங்கோடன் கொல்லைப்புறத்திலிருந்து வெளியே வந்தான் — வாழை மரத் துண்டுடன்.

''ஏம்பா! இதுவும் பண்ணை வீட்டுக்கா?'' என்று கேட்டான் கரியன்.

''இல்லேடா, கண்ணு! நம்ம பார்வதிப் பாட்டி செத்துப் போயிட்டா — அந்தப் பாடையிலே கட்ட'' என்றான் செங்கோடன்.

அலங்காரப் பாடையிலே செவ்வாழையின் துண்டு!

பாடையைச் சுற்றி அழுகுரல்!

கரியனும், மற்றக் குழந்தைகளும், பின் பக்கம்.

கரியன் பெருமையாகப் பாடையைக் காட்டிச் சொன்னான், ''எங்க வீட்டுச் செவ்வாழைடா'' என்று.

''எங்க கொல்லையிலே இருந்த செவ்வாழைக் குலையைப் பண்ணை வீட்டுக்குக் கொடுத்துட்டோம் — மரத்தை வெட்டிப் பாடையிலே கட்டிவிட்டோம்'' என்றான் கரியன்.

பாவம்! சிறுவன்தானே!! அவன் என்ன கண்டான், செங்கோடனின் செவ்வாழை, தொழிலாளர் உலகிலே சர்வசாதாரணச் சம்பவம் என்பதை..

# உங்கள் கேசம் உதிரத் தொடங்கினால் அல்லது பொடுகு விழுந்தால்

## அதை உடனே நிறுத்துங்கள்!

உற்ற தருணத்தில் கவனித்தால், கேசம் உதிர்வதையும் பொடுகு விழுவதையும் தடுக்கலாம் என்று ஆழ்ந்த பரிசோதனைகள் நிரூபித்துள்ளன.

**கேசம் உதிரக் காரணம்**

கேசத்தின் ஆரோக்கியம் அதன் வேர்களை—மயிர்க்கால்களை-பொறுத்துள்ளது. வேர்களுக்கு அருகிலுள்ள பாகங்கள் உயிரற்றுப் போனாலும், ரத்தஓட்டம் குன்றினாலும் வேர்களுக்கு அவசியமான ஊட்டம் கிடைப்பதில்லை.




அடிக்கடி கேசத்தை சீவினாலும், சோப் போட்டுக் கழுவினாலும், கேசம் பெருமளவில் உதிருகின்றது. கேசம் உதிர்வதற்கு இதுவே அறிகுறி.

**ஆபத்தான பொடுகு விழாமல் காத்துக் கொள்ளுங்கள்:**

பொடுகு விழுவதைப் புறக்கணிப்பதால்தான் கேசம் உதிரத் தொடங்குகிறது.

**கேசம் உதிர்வதையும் பொடுகு விழுவதையும் தடுக்கப்பயனுள்ள வழி**

20 ஆண்டுகளுக்கும் மேலாக எஃப். ஹாஃப்மன்லா ஆய்வுக்கூடத்தில் ஆழ்ந்த ஆராய்ச்சிகள் நடத்தி, பாந்தினால் என்னும் ஓர் அற்புதமான ஊட்டப் பொருள் கண்டுபிடித்துள்ளார்கள். அந்த ஊட்டப் பொருள் உயிரற்ற செல்களுக்குப் புத்துயிரூட்டுகிறது. இந்த பாந்தினால் கொண்ட பான்டீன் விரைவிலேயே மேலை நாடுகளில் உச்ச விற்பனையுள்ள கேச டானிக்காக விளங்கி விட்டது.

பாந்தினால் கொண்ட பான்டீன் அவசியமான எல்லா மூன்று பாகங்களிலும் செயல் புரிகிறது. (அ) வேர்களின் அருகிலுள்ள பாகத்துக்குப் புத்துயிரூட்டி, போஷாக்கு அளிக்கிறது. இதனால் கேசம் உதிர்வது நின்று விடுகிறது. (ஆ) மண்டைத் தோலை சுத்தம் செய்கிறது; நோய்க் கிருமிகளைக் கொல்லுகிறது; கேசம் உதிர்வதைத் தடுக்கிறது. (இ) மயிர்க்கால்களுக்குப் புத்துயிரளித்து, கேசத்திற்குப் பளபளப்பூட்டுகிறது.




**பான்டீனின் வெற்றியின் இரகசியம்-நாள்தோறும் உபயோகியுங்கள்**

பான்டீன், மற்ற சாதாரண டானிக்குகளைப் போலன்றி, இலேசாகவும் பிசுக்கற்றும் உள்ளது. இது மண்டைத் தோலுக்கு அடியில் இறங்கி செயலாற்றுகிறது. இதனால் மயிர்க்கால்களுக்கு ஊட்டம் கிடைக்கிறது.

கேசம் உதிர்வதையும் பொடுகு விழுவதையும் தடுக்க சிறந்த வழி, நாள்தோறும் பான்டீன் உபயோகிப்பது.

**பான்டீன்—கேசத்திற்கு அவசியமான டானிக், உன்னத அலங்கார சாதனம்**

பான்டீன் ஒன்றுதான் விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்ட கேச டானிக். இது கேசத்திற்கு ஊட்டமளிப்பதோடு, உலகின் பிரபல கேச அலங்கார சாதனங்களில் ஒன்றாகவும் விளங்குகிறது. பான்டீன் உபயோகியுங்கள்; கேசத்திற்குப் புத்துயிர் அளியுங்கள்.




**பான்டீன்** கேசத்திற்கு ஸ்விட்ஜர்லாந்தின் வைட்டமின் ஃபார்முலா-இந்தியாவில் கிடைக்கிறது.

பிசுக்கற்ற 'எண்ணெ கொண்ட ஃபார்முலா

இந்த ஆண்டு ஜனவரி 30ந் தேதி காந்திஜி அமரராகி இருபத்தைந்து ஆண்டுகள் ஆகிவிட்டன.



# காந்தி எத்தனை காந்தி?

காந்திஜி எந்த நோக்கங்களுடன் வாழ்ந்தாரோ அந்த நோக்கத்துடன் வாழ்ந்த பல காந்திகளை மற்ற நாடுகளும் பெற்றிருக்கின்றன என்பது மகிழ்ச்சி பெற வேண்டிய விஷயம். காந்திஜி அமரத்துவம் பெற்று இருபத்தைந்து ஆண்டுகள் ஆகும் இந்தச் சமயத்தில் அந்த மற்ற காந்திகளைப் பற்றியும் தெரிந்து கொள்வோம்.

### தென்னாட்டு காந்தி — ராஜாஜி

காந்தியத் தத்துவத்தை அன்றே ரசித்து அவைகளைச் செயல் முறையிலும் காட்டியவர் ராஜாஜி. சேலம் விஜயராகவாச்சாரியிடம் மகாத்மா ராஜாஜியைப் பற்றிக் கூறியபோது, "உங்கள் சி. ஆர். எப்படியோ என் வழிகளையும் தத்துவங்களையும் நன்றாகத் தெரிந்து கொண்டிருக்கிறார்; எனக்கே வியப்பாக இருக்கிறது!" என்றார் என்றால் அவரைத் தென்னாட்டுக் காந்தி என்று மக்கள் அழைத்ததில் வியப்பென்ன ?

திருச்செங்கோட்டுக்கு அருகில் புதுப் பாளையம் என்ற கிராமத்தில் காந்தி ஆசிரமம் அமைத்து, குடிசையில் வசித்து நிர்மாணத் திட்டங்களை நிறைவேற்றினார். அவர் வாழ்வு முழுமையுமே காந்தியம் இழையோடியது. எதை என்று குறிப்பிடுவது ?





### எல்லை காந்தி — கபார்கான்

"அஹிம்சா தர்மத்தைக் கடைப்பிடிப்பதில் நான் கபார்கானிடமிருந்து அதிகம் தெரிந்து கொள்ள வேண்டியிருக்கிறது" என்று காந்தியினாலேயே பாராட்டப்பெற்றவர் கபார்கான். பலாத்காரத்தில் மூழ்கி எழுந்தவர்களான பட்டாணியர்களை அஹிம்சைப் பாதையில் செலுத்தி மாபெரும் வெற்றி பெற்றவர். இதற்காகவே குதாயி கித்மத்கார் (கடவுளின் தொண்டர்) என்ற செஞ்சட்டை ஸ்தாபனத்தை ஆரம்பித்தார்.

### அமெரிக்க காந்தி — மார்டின் லூதர் கிங்

அமெரிக்காவில் தீராத பிரச்னையாக இருந்துவரும் 'நீக்ரோ'ப் பிரச்னையை அஹிம்சை முறையில் தீர்க்க அரும்பாடுபட்டவர், மார்ட்டின் லூதர் கிங். இது நக்க பலனையும் அளித்துள்ளது என்பதை மறுக்க முடியாது. நீக்ரோக்களும் மனிதர்களே, அவர்களுடன் சமத்துவமாகப் பழகி வாழ வேண்டும் என; வெள்ளையர்களிடையே மன மாற்றம் இப்போது பெரும் அளவுக்கு ஏற்பட்டுள்ளது. இவருக்கு நோபெல் சமாதானப் பரிசு வழங்கப்பட்டது. காந்திஜியைப் போலவே இவர் சுடப்பட்டு மாண்டார்.

### இத்தாலிய காந்தி

அன்பு மூலமே அரியகாரியங்களைச் சாதிக்கலாம் என்பதைவாழ்க்கையில் நிரூபித்துக்காட்டியவர் டேனிலோ டோல்ஸி என்கிறஇத்தாலியர். ஆல்டஸ் ஹக்ஸ்லி, இவரைப் பற்றிக் குறிப்பிடுகையில் 'இத்தாலிய காந்தி' என்று குறிப்பிட்டிருக்கிறார். தம்மை காந்தியுடன் ஒப்பிட்ட பின்னரே இவர் காந்திஜி எழுதிய புத்தகங்களையெல்லாம் படிக்க ஆரம்பித்தார். சம்பல் பள்ளத்தாக்கில் கொள்ளைக்காரர்களை விநோபா சரண் அடையச் செய்ததுபோல் சிசிலியிலுள்ள பல கொள்ளைக்காரர்களைத் தம் அஹிம்சைக் கொள்கை மூலமே சரணடையச் செய்தவர்.

### தென்னாப்பிரிக்க காந்தி ஆர்தர் லித்தூலி

காந்திஜி தென்னாப்பிரிக்காவில் விட்டு வந்த வேலைகளைப் பின்னர் தொடர்ந்து நடத்தி நிறபேத வெறியைத் தம் அஹிம்சை முறையினால் அடக்கி

வந்தவர் ஆர்தர் வித்தானி. இவர் மிகவும் அடக்கமாக இம் மாபெரும் பணியைச் செய்து வந்தார். 1956ல் இவருக்குச் சமாதானம் நிலவச் செய்வதற்கான நோபெல் பரிசு வழங்கப்படவேதான் இவரைப் பற்றி வெளி உலகுக்குத் தெரிய வந்தது.

**கொரியா காந்தி — ஹாம் சோக் ஹான்**

"நான் காரியத்தை நாடிச் செல்லும் எளிய ஊழியன். என்னைக் காந்திஜியுடன் ஒப்பிட்டுக் கூறுவது காந்திஜியைக் கௌரவிக்கும் முறையல்ல" என்கிறார் சோக்ஹான்.

அஹிம்சை முறையையும் ஆதாரக் கல்வி முறையையும் கொரியர்களிடையே பரப்பியவர் இவர். 1919லேயே இவர் ஜப்பானிய அடக்குமுறைகளை எதிர்க்கக் கொரியர்களுக்கு அஹிம்ஸை முறையே சிறந்ததென்று போதித்தவர். ஜப்பான்–கொரியா சகஜ நிலை ஒப்பந்தத்தை ஆட்சேபித்து உண்ணாவிரதம் இருந்தவர்.

**சீன காந்தி — ஜெனரல் பெங்யூ ஹிஸிங்**

இதுவரை கூறப்பட்டு வந்தவர்கள் எல்லோரும் அஹிம்சையில் பூரணமாக நம்பிக்கை கொண்டவர்கள். ஆகவே அந்தந்த நாட்டின் காந்தி என்று அழைக்கப்பட்டார்கள். ஆனால் அஹிம்சை முறையில் நம்பிக்கை இல்லாத இந்த ஜெனரலைச் சீன மக்கள் சீன காந்தி என்றே அழைக்கிறார்கள். மக்களுக்குச் சேவை செய்யும் மனப்பான்மையும் சத்தியத்துக்கு அவர் அளிக்கும் மதிப்பும் அவரைக் காந்திஜியுடன் ஒப்பிட வைத்துள்ளன. சீனாவில் இந்திய ஸ்தானிகராக இருந்த திரு கே. பி. எஸ். மேனன் இந்தச் சீன காந்தியைச் சந்தித்திருக்கிறார். மக்கள் இவரைத் தெய்வமாகவே கருதுகின்றனர் என்றும் இவர் அபாரமாகப் பேசுகிறார் என்றும் குறிப்பிட்டிருக்கிறார்.

எத்தனை காந்திகள் தோன்றினாலும் இந்த உலகுக்குப் போதவில்லையே! — ரஜன்

# படித்துப் பாருங்கள்

## மின்னூர் சீனிவாசன் கவிதைகள்

சாதாரண மனிதர்கள் தாம் பார்க்கும் இயற்கைக் காட்சிகளை ரசிக்கத்தான் செய்கிறார்கள். ஆனால் அவற்றையே ஒரு கவிஞன் கண்டால் தம் ரசனைக்குச் செயல் வடிவம் தருகிறார். அலைகடலும், மழை முகிலும், மணங் கமழும் மலர்ப் பொழிலும் அவர் உள்ளத்தில் கற்பனைகளை எழுப்புகின்றன. உடனே கவிதை பிறக்கிறது.

"பூவில்லாமல் நார் இல்லாமல்
புனைந்த மாலை இதோ—ஒரு
பாவில்லாமல் தறியில்லாமல்
படர்ந்த சேலை இதோ"

என்று தமிழன்னைக்குத் தாம் சாத்திய பொன்னாடையைப் பற்றி அழகாகக் கூறுகிறார். கவிஞரின் கற்பனை வளத்துக்கும் சொல்லாட்சி வளத்துக்கும் இன்னோர் உதாரணம் பார்ப்போம்:

"வீணையில் உறங்கும் நாதம்
மெல்லிய காற்று தாவ,
பாணனில் லாது பேசும்
பாங்குபோல் யாரும் இங்கே
காணவந் திடுமுன் நீயே
கனிமொழி கூறுப் பெண்ணே
விண்படும் நாண மென்னும்
விலங்கதைக் களையாய் பெண்ணே."

இத்தொகுதியில் புதுமை வழிந்தோடும் பல கவிதைகள் பல வண்ணங்களில் மின்னிக் கொண்டிருக்கின்றன.

பிரசுரம்: பாரி நிலையம்: 59, பிராட்வே, சென்னை–1; விலை ரூ. 2.75.

## Samkshepaka Sariraka

ஜீவன் என்பவன் யார்? இவன் வாழும் ஜகம் என்பது எங்கிருந்து வந்தது? இந்த ஜகத்தையும் ஜீவனையும் பிணைத்துவிட்டிருக்கும் சக்தி எது? ஜீவனுக்கு இன்ப துன்ப சஞ்சலங்களிலிருந்து விடுதலை தருகிற உபாயம் எது? இவற்றுக்கெல்லாம் பிரத்தியட்ச அனுபவத்தின் மூலம் விடை கண்ட மகான்கள், வாக்கும் மனமும் கொண்டு எத்தனை தூரம் இவற்றை விளக்க இயலுமோ அவ்விதம் வேதாந்த நூல்களில் விளக்கியுள்ளனர். இவற்றில் பாதராயணரின் பிரம்மசூத்திரம் மிகவும் உன்னதமானதோர் இடம் பெற்றுள்ளது. அதற்கு ஆதி சங்கரர் செய்த பாஷ்யமோ அத்யாத்மக் கொடுமுடியாகவே கருதப்படுகிறது. அந்த பாஷ்யக் கருத்துக்களை விளக்கி, சங்கரருக்கும் சுரேசுவரருக்கும் பிற்பாடு காமகோடி பீடத்தின் ஆசிரியர்களாக விளங்கிய சர்வக்ஞாத்மர் 1240 சுலோகங்களில் இயற்றிய அத்வைதக் கருவூலமே "சம்க்ஷேபக சாரீரகம்". அத்வைதக் கொள்கைக்குள்ளேயே நிலவும் நுண்ணிய மாறுபாடுகளையும் அத்வைதத்துக்கு மாறான பிற சித்தாந்தங்களின் கோட்பாடுகளையும் சர்வக்ஞாத்மர் தெளிந்த மனத்தோடு அலசி ஆராய்ச்சி செய்து தம் முடிவுகளை ஆணித்தரமாக வெளியிட்டிருக்கிறார். 'ஸம்க்ஷேபக சாரீரக'த்துக்குப் பிற்காலத்துப் பெரியோர் பலர் எழுதிய எட்டு விரிவுரைகள் உள்ளன என்பதிலிருந்தே இந்தக் கிரந்தத்தின் பெருமையை உணரலாம்.

இந்த உத்தமமான நூலுக்கு லாகவமான ஆங்கில மொழிபெயர்ப்பும், தெள்ளிய குறிப்புகளும், அரிய பெரிய முகவுரை ஒன்றும் எழுதியிருக்கிறார் டாக்டர் என். வீழிநாதன். அவர் வேதாந்த நூல்களில் ஆழ்ந்தகன்ற புலமை பெற்ற ஆராய்ச்சியாளர் என்பது நூல் முழுதும் தெற்றெனப் புலனாகிறது. தன்னைக் குறித்த, உலகைக் குறித்த, ஈசனைக் குறித்த, இதனைத்துமான பிரம்மனைக் குறித்த சத்திய சூட்சுமங்களில் ஈடுபாடுள்ளோருக்கு அரிய விருந்து இந்நூல்.

Publishers: Centre for Advanced Study in Philosophy, University of Madras, Madras-5. Price Rs. 30/-




**3**

மேனாட்டு அறிஞர் கூறியது போல் இதயத்தை உடைத்துக் கொடுப்பவளா பெண்?.....

நெற்றியில் சுருக்கங்கள் விழ மீண்டும் புத்தக அலமாரியை நோக்கினான் மோகனசுந்தரம்.

இதயத்தை முழுமையாக்கிக் கொடுக்கிற கடவுளை விட மேம்பட்டவளாயிற்றே, கற்புடைய குடும்பப் பெண்! மங்கையற்கரசி எங்கள் தெய்வம் என்று கூறியது இந்த மண்தானே! எந்த மண்ணிலேயோ பயிரான புஷ்பத்தை முகர்ந்து அவசியமில்லாமல் மூளையைக் குழப்பிக் கொள்வது எத்தனை பைத்தியக்காரத்தனம்!

படுக்கையறையை நோக்கிச் சக்கர வண்டியை நகர்த்தினான். அது அவனுடைய சிந்தனையை மேலும் குழப்புவது போலக் கிரீச்சிட்டுப் புலம்பியது.

மோகனசுந்தரத்துக்கு ஓர் அதிர்ச்சி. ஏன் இந்த அதிர்ச்சி? எதற்காக ஏற்பட வேண்டும்? 'கிரீச்' என்ற ஒலி மாடிக்குக் கேட்டுவிடுவதால் என்ன நடந்துவிடப் போகிறது? ஓயாமல் கேட்டுக் கொண்டிருக்கும் தட்டெழுத்து யந்திரத்தின் ஒலியை விட இது என்ன அவ்வளவு பெரிதாகிவிடப் போகிறது?

ஆமாம்; படுக்கைக்குக் கொண்டு போய் விட்ட பிறகு ஹாலுக்கு ஏன் வர வேண்டும்? இப்படி அநாவசியமாகச் சுற்றியலையக் கூடாது; சுற்றி யலைந்து உடம்பைக் கெடுத்துக் கொள்ளக் கூடாது என்பதுதானே பைரவியின் அன்புக் கட்டளை! அதற்காகத்தானே அசிங்கமாக அக்குளில் இடுக்கி நொண்டி நொண்டி நடந்து வருவது பிடிக்காமல் ஊன்றுகோல்களை எடுத்துப் பரணையில் போட்டுவிட்டாள்!

கே. பாலசந்தர்

இப்போது நெஞ்சத்தில் பைரவி இதமாக வருடுகிறாள்! மனைவியின் மீது அவனுக்குக் கொள்ளை ஆசை; அந்த ஆசையில் இன்று பார்த்து ஒரு பிடி குறைவானேன்? அவனுக்கே புரியவில்லை. சில சமயங்களில் பல விஷயங்கள் புரிந்து விடுகின்றன; ஆனால் பல சமயங்களில் சில விஷயங்கள் புரிவதில்லை. இதற்குப் பெயர்தானே தத்துவம் அல்லது மனிதத்துவம்!

பக்கத்து ஸ்டாண்டில் ஆயில்கேன் இருந்தது. அதை எடுத்து வண்டிச் சக்கரங்களுக்கு எண்ணெய் ஊற்றி நகர்த்திச் சத்தம் வராமல் செய்ய முயன்றான். அப்படியும் அது கேட்கவில்லை. ஆனாலும் முன்பை விட எவ்வளவோ தேவலை. சத்தம் குறைந்திருந்தது.

மெல்லப் படுக்கையறைக்குச் சென்றான். படுக்கையை ஒட்டினாற்போல் வண்டியை நிறுத்திவிட்டுக் கட்டிலின் விளிம்பைப் பற்றித் தாவி ஏறி உட்கார்ந்து கொண்டான். தலையணைகளைச் சரிபார்த்த வண்ணம் சாளரத்து வழியாக மாடியை அண்ணாந்து நோக்கினான்.

டக் டக், டகடகடக்...

தட்டெழுத்து யந்திரத்தின் ஒலி சங்கிலித் தொடராக ஒலித்துக் கொண்டு இருந்தது.

நெற்றியில் வியர்வை அரும்பப் பைரவி டைப் செய்து கொண்டிருப்பாள்! டைப்ரைட்டரைப் போலவே அவளும் ஒரு யந்திரமாகவே போய்விட்டாள்! ஓய்வேது, உறக்கம் ஏது?

நாமோ முடமாகி விட்டோம்! இதனால் வாழ்க்கையே முடமாகிவிட்டது. ஒன்று முடமானால் எல்லாமே முடம் என்பார்கள்! கொஞ்ச நேரத்துக்கு முன்பு மூளை நரம்புகளுக்கு ஏற்பட்ட முடமும் இப்படியானதுதானா?

மல்லாந்தவாறு படுக்கையில் சாய்ந்தான் மோகனசுந்தரம். சிந்தனை அலைகளிலிருந்து நுரைகள் வலை விரித்தன. என்றுமே இல்லாத கூத்து இன்று பார்த்து ஏற்பட்டு விட்டதே! ஏன் இப்படி ஏற்பட வேண்டும்? இத்தனை நாட்கள் அமைதியாகச் சென்றிருந்த வாழ்க்கைச் சகடம் கேவலம் ஒரு சிரிப்பொலியை வைத்துக் கிரீச்சிடத் தொடங்கி விட்டதே! சக்கர வண்டிக்கு 'ஆயில்கேன்' உதவி புரிந்து விட்டது. சங்கடமான அலை மோதல்களுக்கு எதை ஊற்றிச் சரிபார்க்க முடியும்?

எல்லாவற்றுக்குமே காரணம்—

மனம், மனம், மனம்!

கண்களை மெல்ல இமைகள் தழுவுகின்றபோது—

...............

தட்டெழுத்து யந்திரத்தின் ஒலி நின்றது. ஓ.. டைப் செய்து முடித்து விட்டாள் போலும்! தழுவிய இமைகள் மீண்டும் திறந்தன.

சற்று நேரம் வரையில் எந்த விதச் சத்தமும் கேட்கவில்லை. தலையைச் சற்றே சாய்த்துக் காதுகளைக் கூர் தீட்டியவண்ணம் உன்னிப்பாகக் கவனித்தான் மோகனசுந்தரம். அவ்வாறு கவனிப்பது அவனுக்கே நாணம் தருவதாகத் தெரிந்தது. ஏன் இப்படிக் கவனிக்க வேண்டும்? எத்தனை சமாதானம் செய்து கொண்டும் அந்த ஒரு சிரிப்பொலி மனத்தை எப்படி யெல்லாம் ஆட்டிப் படைக்கிறது! சிரிப்பொலிதான் ஆட்டிப் படைக்கிறதா? அல்லது அந்தச் சிந்தனையாளர்கள் கூறிய பொன்மொழிகள்தாம் ஆட்டிப் படைக்கின்றனவா? அனுபவ வாக்குகள் சிந்தனையை ஆட்கொள்வதும் உண்டு; ஆட்டிப் படைப்பதும் உண்டு என்கிறார்களே! அதுதானோ இது?

மாடிப் படிகளில் பைரவி இறங்கி வருகிற சத்தம் கேட்டது.

சிந்தனை தடைப்பட்டது.

கண்களை மூடிக் கொண்டு தூங்குவதுபோல் பாவனை செய்ய முடிவு செய்து கொண்டான் மோகனசுந்தரம். எதற்காக இப்படி நடிக்க வேண்டும்? முதன் முறையாக ஆசையுள்ள — அன்புள்ள — பாசமுள்ள — பற்றுள்ள மனைவியிடம் இப்படி நடிக்கிறோம் என்பது அவனுக்கே புரிந்தது. ஆனால் அதற்கான அர்த்தம் அவனுக்கே புரியவில்லை. எல்லாவற்றுக்கும் ஓர் அர்த்தம் உண்டு என்பதில்லை; எல்லாமே அர்த்தமற்றதுமில்லை.

ஓ.... எத்தனை பெரிய தவறு செய்கிறோம்!

அறைக் கதவுகள் திறக்கும் ஓசை!

மூடிய கண்கள் மூடியவாறே காட்சி தந்தான் மோகனசுந்தரம்.

உள்ளே நுழைந்த பைரவி அறையை ஒரு முறை சுற்றுமுற்றும் கவனித்தாள். கணவர் தூங்குகிறார்! வழக்கமாக

விளக்கை அணைத்துவிட்டு உறங்கச் செல்லும் அவர் இன்று பார்த்து மறந்துவிட்டார். படித்துக் கொண்டே யிருந்ததால் ஏற்பட்ட மறதியாகவும் இருக்கலாம். அவளுக்கு ஒரு நினைவு வந்தது. அலுவலகத்திலிருந்து திரும்பியபோது வீசியெறிந்த புத்தகத்தின் நினைவு. சற்றே இரண்டு அடிகள் எடுத்து வைத்து ஹாலைக் கவனித்தாள். அங்கே புத்தகமில்லை. அதனை அலமாரியில் எடுத்து வைத்துவிட்டு மறதியாகப் படுத்துக் கொண்டார் போலும்!

ஒளி நிறைந்த வாழைத் தண்டுபோல் எரிந்துகொண்டிருந்த 'டியூப் லைட்'டை அணைத்துவிட்டு, மின்சார விடிவிளக்குப் பித்தானை அழுத்தினாள். அதுதான் விடிய விடிய இவர்களைத் தூங்க வைத்துத் தான் விழித்துக் கொண்டிருக்கும்!

கதவை மூடித் தாழிட்டுக் கொண்டு படுக்க முனைந்தாள். படுக்குமுன் கணவனுடைய காலைத் தொட்டுக் கும்பிடுவது வழக்கம். காலைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொண்ட போது —

'பொய்த் தூக்கத்துடனிருந்த மோகன சுந்தரத்துக்கு யாரோ கன்னத்தில் 'பளீர்' என்று அறைந்தது போன்ற உணர்வு. தான் தூங்குவதாக நடிக்கும் பொழுது பைரவி அவர்தான் தூங்குகிறாரே என்று அவனை அலட்சியம் செய்யவில்லை. என்றைக்கும் அவனது கால்களைத் தொட்டுக் கும்பிடும் வழக்கத்தை இன்றும் அவள் கவனமாகச் செய்கிறாளே!



அப்படிப்பட்ட பைரவியைப் பற்றி என்னவிதமாகவெல்லாம் எண்ணமிட்டு விட்டோம்! கண்ணைக் கூழாங்கல்லாக்கி வைரத்தை எடை போடுவது போலாய் விட்டோமே !

பைரவி கணவனின் பக்கத்தில் பதவி சாய்ப் படுத்துக் கொண்டாள். அவனுக்கு ஏதோ ஒரு தீங்கை இழைத்து விட்டது போன்ற உள்ளுணர்வு பொங்கியது. 'ஓ'வென்று சத்தமிட்டு அலறி விடலாம் போலத் தோன்றியது. மனைவி பக்கத்தில் படுத்துக் கொண்டிருக்கவே, அவ்வாறு அவனால் செய்ய முடியவில்லை. அந்த உள்ளுணர்வு கண்களில் நீராய்ப் பெருக்கெடுத்துவிட்டது. தாரை தாரையாக வழியும் கண்ணீரைத் தடுத்து நிறுத்த அவனாலும் முடியவில்லை; மூடிய அவனது கண் இமைகளாலும் முடியவில்லை. மனிதனுக்குச் சிரிப்பையும் கண்ணீரையும் மட்டும் ஆண்டவன் வைக்கவில்லையென்றால், இந்த உலகம் வெறும் கர்ஜனையுடன் அலைந்து கொண்டிருக்கும் பரிதாப மிருக நிலைக்குத் தானே ஆளாகி யிருக்கும்?

கணவன் மெல்ல அசைந்து கொடுப்பதைக் கவனித்துத் திரும்பிப் பார்த்தாள். வழக்கமாக அப்படி ஓர் இமையோடிய சமிக்ஞை அவர்களுக்குள் உண்டு. 'அது'தானோ என்று எண்ணி வலக் கரத்தால் கணவனுடைய கழுத்தைத் தழுவுகிறபோது —

'சில்'லென்ற ஓர் உணர்வு. உற்றுக் கவனித்ததில் கண்ணீர்ப் பெருக்கு என்பது தெரிய வந்தது. பதற்றத்துடன் எழுந்து கவனித்தாள். மருள மருள விழித்தவண்ணம் கண்களை விரல்களால் தடவிப் பார்த்தாள். அந்த ஸ்பரிச உணர்வின் காரணமாக விழித்தவன் போல் கண்களைத் திறந்தான் மோகனசுந்தரம்.

எழுந்து சென்று விளக்கைப் போட்டாள். அது, மோகனசுந்தரத்தின் கண்ணீர் தாரையிட்ட கோலத்தை வெளிச்சம் போட்டுக் காட்டியது.

இமைகள் படபடக்கக் கணவனை நோக்கிய பைரவியின் நிலை மிகுந்த பதற்றத்துக்குரியதாக இருந்தது. மோகனசுந்தரமோ பிஞ்சான சிரிப்பொன்றை உதிர்த்து, ''என்ன பைரவி? என்ன நடந்தது? ஏன் விளக்கைப் போட்டாய்?'' என்று ஒன்றுமே தெரியாதவன் போலக் கேட்டான்.

''நீங்க இன்னும் தூங்கலையா ?'' — பைரவியின் உதடுகள் படபடத்தன.

''ஏன்? தூங்கிக்கிட்டுத்தான் இருந்தேன். கண்ணைக் குத்துவது போல் உன் விரல் படவே விழிச்சுக்கிட்டேன்.''

''ஏன் அழறீங்க ?''

''அழறேனா ?''

''பின் ஏன் கண்ணிலே நீர் வழிகின்றது ?''

''ஓ... அதுவா ? ஒரு மணி நேரத்துக்கு முன்னாலே வரை தெளிவாக இருந்த என் கண்களில் தூசு ஒன்று வந்து விழுந்தது. எவ்வளவோ முயற்சி பண்ணி அதை எடுக்கப் பார்த்தேன். தூசு வந்துட்டதா இல்லியான்னு தெரியலே. நீர் வழியறது மட்டும் நிற்கலே.''

''ஐயய்யோ ! என்னைக் கூப்பிடக் கூடாது? நான் வந்து ஊதி யெடுத்திருப்பேனே !''

''ஒரு சின்ன தூசுக்காக உனக்குத் தொல்லை கொடுக்கிறதா?''

''பரவாயில்லே ; கண்ணைக் காட்டுங்க ஊதறேன் !''

பரபரப்புடன் கணவனருகே சென்றாள். இரண்டு கண்களையும் மாறி மாறி விரல்களால் விரித்து வேகமாக ஊதினாள். தூசு இருந்தால்தானே பறப்பதற்கு ?

''இப்ப எப்படி இருக்கிறது?''

''ஒரு ரிலீஃப் தெரிகிறது ! ஆமாம்; வாயில் என்ன பீடா வாசனை வர்றாப் பிலே தெரியறது !''

''ஓ... அதுவா ! ஆபீஸிலே இருந்து வர்ற வழியிலே பாம்பே பீடா வித்துக்கிட்டிருந்தான். உங்களுக்காகத்தான் ஒண்ணு வாங்கினேன். ஆனா...மறந்தே போயிட்டேன். கொஞ்ச நேரத்துக்கு முன்னாலேதான் ஞாபகம் வந்தது: நீங்க தூங்கிக்கிட்டு இருப்பீங்களேன்னு நினைச்சு நான் போட்டுக்கிட்டேன்.''

''வாசனை நல்லா இருக்கு; நாளைக்கு வர்றச்ச ஒண்ணு வாங்கிட்டு வா !''

''அவசியம் வாங்கிக்கிட்டு வருவேன்.''

''ஆனா அவசியம் மறந்துடுவே, இல்லியா ?''

''நிச்சயம் மறக்க மாட்டேன்.''

பைரவியின் கண்கள் கலங்கிவிட்டன. மோகன சுந்தரத்துக்கு என்னவோ போல் ஆகிவிட்டது. ''சே, சே ! நீ எதுக்காக அழணும்? உன் கண்ணிலே ஏதாச்சும் தூசு பட்டுட்டுதா?''

பைரவி கண்களைத் துடைத்துக் கொண்டே சிரித்துக் கொண்டாள். அவள் சொன்னாள்: ''உங்களை மறந்து எனக்கொரு வாழ்க்கையா ?''

எத்தனை பொருள்படச் சொல்லிவிட்டாள் பைரவி !

எரிகிற விளக்கை அணைக்கச் சென்றாள் பைரவி. அப்போதுதான் மோகனசுந்தரம் ஒன்றை உன்னிப்பாகக் கவனித்தான்.

# RAJAJI'S MAHABHARATA

*"Those that do not know the story of MAHABHARATA cannot be deemed to be children of Bharatavarsha. Not all could read the original MAHABHARATA in its entirety. I therefore wrote "Vyasar Virundhu" (a condensation of MAHABHARATA in Tamil which was serialised in Kalki). "Vyasar Virundhu" and its English rendering in book form are selling in lakhs. But my own feeling is that this is not enough. I pondered over how best to make people read this epic and asked the Kalki management to serialise "Vyasar Virundhu" once again week after week, which they did. Let all people read this great epic. Falsehood and deceit will get far away on reading our epics; the mind will turn to the path of righteousness. Righteousness alone is the path of deliverance."*

Thus wrote Rajaji in the Kalki some time ago. He later expressed a desire to carry his MAHABHARATA in English in Swarajya. By way of fulfilling his wishes Rajaji's MAHABHARATA will be serialised in Swarajya from the issue dated Jan. 13, 1973.

T. SADASIVAM
Publisher, SWARAJYA
Kalki Buildings, Chetput, Madras - 600031

ஆமாம்; உணவு பரிமாறுகிறபோது தலை நிறைய மல்லிகைப்பூ வைத்துக் கொண்டிருந்தாள். இப்போது அதைக் காணோமே !

நாம்தான் நினைவு மறதியாக இருக்கிறோமா? இல்லையே ! நன்றாக நினைவிருக்கிறதே !

விளக்கு அணைந்தது.

பைரவி பக்கத்தில் வந்து படுத்துக் கொண்டாள்.

மீண்டும் மோகனசுந்தரத்தின் நினைவு கொட்டம் அடிக்கத் தொடங்கிவிட்டது.

நன்றாக நினைவிருக்கிறது.

சோறு போடும்போதுகூட, ''இப்படி மல்லிப்பூ மாதிரி அரிசி, இந்தக் காலத்துலே உனக்கு எங்கே கிடைக்கிறது, பைரவி ?'' என்று கேட்கிறபோது, பைரவியின் கொண்டையில் செருகியிருந்த மல்லிகைப் பூச்சரத்திலிருந்து ஒன்று சொல்லி வைத்தாற்போல் விழுந்ததே !

''பார்த்தாயா, பைரவி ! நான் சொல்வதை ஆமோதிப்பது போல் உன் தலையிலிருந்து மல்லிப்பூ விழறது !.... கண்ணிலேதான் பூ விழும்னு பார்த்திருக்கிறேன் ; இங்கே சோத்திலே விழறது!'' என்று நகைச்சுவையாகக் கூற, பைரவிகூடக் கலகலவென்று சிரித்தாளே !

கேட்டுவிட வேண்டும் என்று வாய் திறந்தான் மோகனசுந்தரம். அப்போது பார்த்து பைரவியின் குரல் கேட்டது.

''ஆமாம்; நான் ஆபீஸிலேயிருந்து வர்றச்சே, ஏதோ ஒரு புஸ்தகத்தை வீசி எறிஞ்சீங்களே ! எதுக்காக? அப்பவே கேட்கணும்னு நினைச்சேன் ; மறந்துட்டேன்; டைப் அடிச்சு டைப் அடிச்சு வர வர ஞாபக மறதி அதிகமாப் போச்சு !''

இதைப் பற்றிப் பைரவி கேட்பாள் என்று மோகனசுந்தரம் எதிர்பார்த்தது தான். அவன் சொன்னான்: ''அது ஒரு பொன்மொழிப் புத்தகம் பைரவி! பெண் என்கிற தலைப்பின் கீழ் பல அறிஞர்கள் எவ்வளவு கேவலமாக எழுதியிருக்காங்க தெரியுமா ? படிச்சுக்கிட்டே வருகிறபோது, வந்த கோபம் தாளாமத்தான் வீசி எறிஞ்சேன் !''

''ஓ.... அப்படியா ? எல்லாம் மேல்நாட்டு அறிஞர்கள்தானே ?''

மோகனசுந்தரத்துள் ஓர் அசைவு. ''ஏன் ?''

''அந்த நாட்டு நாகரிகத்துக்கு அப்படித்தான் எழுத முடியும். இந்த மண்ணுக்குரிய புத்தகத்தை முகர்ந்து பாருங்கள். மல்லிகைப்பூ வாசனை கும்மென்று வீசுறப்பலே பெண்களைப் பத்தி எழுதியிருப்பாங்க !''

மோகனசுந்தரத்தின் மல்லிகைப்பூ நினைவு மேலும் தலை தூக்கியது.




## புகழ் பெற ஒரு வழி

கடலலை எழுந்து கரையினை நெருங்கி
உடனே டும்நிலை உணர்ந்தாயா — உயிர்
உடலினில் இருந்து உலகில் வாழ்ந்துபின்
மடிந்திடும் நிலையும் அதுதானே

சிலசில நிமிடம் திரையினில் ஒளிர்ந்து
உலவிடும் படம்போல் தோன்றுதடா — உயிர்
சிலபல நாளில் உடலினை மறந்து
விலகிடும் அதனால் நீ கேளாய்.

வாழ்நாள் வாழ்ந்தும் வீழ்நாள் சாகுமவ்
வாழ்க்கை வாழ்வது ஒருகேடா — புகழ்
வாழ்ந்திடும் பொழுதில் வந்துனை அடைந்து
வாழுதல் வேண்டும் வகை யறிவாய்.

திருக்குறள் உரைத்திடும் கருத்தினை உணர்ந்து
மருள்நிலை அகற்றி மதிப்படைவாய் — அது
உலகினில் உனக்குநற் புகழ்தனைப் பெறவே
உளதென அறிவாய் ஒரேவழி.

— தமிழரசு

''ஆமாம், பைரவி ! சாப்பிடறபோது தலைநிறைய மல்லிகைப்பூ வைச்சுக்கிட்டிருந்தியே, இப்ப எங்கே காணோம்?''

''ம்ம்ம்!''

பதில் வரக் கொஞ்சம் நேரம் பிடித்தது. ''நாளைக்கு வெள்ளிக்கிழமை ; வெறும் தலையோட ஆபீசுக்குப் போகணுமேன்னு நினைச்சு, பூவை ஈரத் துணியிலே நனைச்சுச் சுத்தி வச்சிருக்கேன் !''

அப்பாடா !

ஆனாலும் இந்தப் பதில் வர ஏன் சில வினாடிகள் ஆயின ?

சம்பந்தமில்லாத கேள்விகளையும், சின்னச் சின்ன அர்த்தமில்லாத விஷயங்களையும் இன்று ஏன் கேள்வியாகக் கேட்டுக் கொண்டிருக்கிறார் என்று அவள் நினைத்தாளோ ? ஏன் நினைக்கமாட்டாள்? அந்த நினைவில் பதில் சொல்லச் சிறிது நேரம் பிடித்திருக்கலாம்.

சீச்சீ! இந்த ஆண் புத்தியைச் செருப்பால் அடித்துக் கொள்ள வேண்டும் !

கடந்த சில மணி நேரங்களாகத் தானே கேள்வித் தாளைத் தயாரித்துக் கொண்டு எல்லாக் கேள்விகளுக்கும் தானே விளக்கமாகப் பதிலையும் எழுதித் தீர்த்து விட்டான் மோகனசுந்தரம்! நூற்றுக்கு நூறு கிடைக்கும்படியாகப் பரீட்சை எழுதிவிட்ட மாணவனின் நிலைதான் மோகனசுந்தரத்துக்கு.

நெஞ்சில் ஒரு நிறைவு ஏற்பட்டுவிட்டது ! மோகனசுந்தரம் நிம்மதியாகக் கண்ணயர்ந்தான்.

இருளென்று இல்லா விட்டால் — ஆராய்ச்சியில்லை; ஒளியென்றில்லாவிட்டால் தெளிவும் இல்லை என்பதுபோல் உதயசூரியன் கிழக்கு வானில் வருகை தந்தான்.

பின்தூங்கி முன்னெழும் தமிழ்க் குடிமகளைப் போல் வெள்ளென எழுந்துகொண்ட பைரவி, காலைக் கடன்களை முடித்துக் கொண்டு சூடு பறக்கக் காப்பி போட்டு எடுத்துக் கொண்டு வந்தாள். அதற்குள் மோகனசுந்தரமும் விழித்துக் கொண்டான். கட்டிலில் சாய்ந்தபடியே இருந்த கணவனிடம் காப்பியை நீட்டினாள் பைரவி. வெள்ளிக்கிழமை குளித்து முடித்த ஈரத் தலையுடனிருந்த அவளைக் காணுகிறபோது ஒரு புதிய கிளர்ச்சியை உண்டுபண்ணியது. பெண்களே குளித்து முடித்து ஈரக்கூந்தலுடன் வருகிற போது ஒரு தனியான கவர்ச்சியுடன் தான் இருப்பார்கள். இதற்கு நேர்மாறானவர்கள் ஆண்கள்.

காப்பியை அருந்திய மோகனசுந்தரம் சிகரெட்டை எடுத்தான். பற்ற வைக்கத் தீப்பெட்டியில்லை. அதனைப் புரிந்து கொண்ட பைரவி அடுக்களைக்கு ஓடிச் சென்று தீப்பெட்டியைக் கொண்டு வந்தாள்.

சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டு புகையை இதமாக வெளிப்படுத்தினான் மோகனசுந்தரம்.

அதற்குள் அடுக்களைக்குச் சென்று உலையில் அரிசி போட்டுவிட்டு, அறைக்கு மீண்டும் ஓடி வந்தாள். கணவனைக் கைத்தாங்கலாகப் பிடித்துச் சென்று காலைக் கடன்களுக்கான ஆயத்தங்களைக் கவனித்தாள்.

'இந்தக் காலத்தில் எந்த மனைவி இப்படியெல்லாம் செய்வாள் ? கதைகளில்கூடப் படிக்க முடியாத ஒன்றல்லவா ?' —

ஒவ்வொரு நாளும் மனத்தில் எழுகிற இதே சொற்கள் அன்றும் மோகனசுந்தரத்தின் நெஞ்சில் ஒலியற்று எழுந்து அடங்கின ! இப்பேர்ப்பட்ட உத்தமமானவளை... சீச்சீ! மீண்டும் சிந்தித்தாலே மகா பாபம் !

கணவனுக்குச் சிற்றுண்டி பரிமாறித் தானும் உண்டு மகிழ்ந்தாள் பைரவி.

பின்னர் பகல் உணவை எடுத்து வந்து 'டைனிங் டேபிளி'ல் வைத்தாள். அதற்குள் வேலைக்காரி அஞ்சலை வந்து விட்டாள். அவளிடம் வழக்கமான பொறுப்புக்களைக் கவனிக்குமாறு எச்சரித்தாள்.

கடிகாரம் இருபது முறை குரல் விடுத்துப் பத்து மணியாகிவிட்டது என்பதை அறிவித்தது.

மாடிக்குச் சென்ற பைரவி, ஆபீஸ் ஃபைல்களைச் சுமந்தவாறு கணவன் முன் வந்து நின்றாள். இனிதான ஒரு புன்னகையை உதிர்த்தவாறு, ''நான் ஆபீசுக்குப் போயிட்டு வர்றேன் !'' என்று உத்தரவு கேட்டாள்.

மௌனமான ஒரு புன்னகையுடன் கண்களை ஒரு கணம் மூடி மறுகணம் திறந்து தலையசைத்து உத்தரவு வழங்கினான் மோகனசுந்தரம்.

பைரவி புறப்பட்டாள்.

அவளுடைய பின்னழகைக் கண்டு ரசிக்கிறபோது —

மோகனசுந்தரத்தின் கண்கள் அகல விரிந்தன.

பைரவியின் தலையில் மல்லிகைப் பூச்சரத்தைக் காணவில்லை. வெள்ளிக்கிழமையும் அதுவுமாக அவள் வெறுந்தலையுடன் செல்கிறாளே! இரவு ஈரத் துணியில் சுற்றி வைக்கப்பட்டிருப்பதாகச் சொன்ன மல்லிகைச் சரம் என்ன வாயிற்று ?

குட்டையாகித் தெளிந்த மோகனசுந்தரத்தின் மனத்துக்கு மீண்டும் ஒரு கலக்கமா ? (தொடரும்)

## அன்றும் இன்றும் சிலருக்கு அதே இளந்தளிர் மேனி!




## பியர்ஸ் சருமக் களை ... கன்னிப் பருவக் களை

இப்போது அழகுகளின அட்டைப் பெட்டியிலே கிடைக்கிறது
சென்னை நகரிலும், திருவனந்தபுரத்திலும், கோழிக்கோட்டிலும் மட்டுமே.


வரட்டுமா? டாட்டா!
?!
எஜமானன் மனம் சரியில்லை என்று திரும்பி புரிந்து கொண்டது. உள்ளுணர்வின் ஆணையை ஏற்று அது தன்னைப் பின் தொடர்வதை அறியாமலே ஜக்கு நடந்தான்.


ராமா பவ
பி.க.பி.ம வை வெல்ல ஒரு திட்டம் தேவை. பத்து வருஷமானாலும் நிறைவேறாத ஐந்தாண்டுத் திட்டமாதிரி இல்லாமல் கணப்போதில் வெற்றி தரக் கூடிய திட்டம் என்ன திட்டம்? .... ஆ உடுப்பி ராமா பவன்!.... சாவைத் தேடிப் போகிறோம்; வயிறு முட்டப் புசித்ததைத் தின்று விட்டாவது போகலாம்!
? ?


பாதாம் அல்வா, இளைப் நான், கோவாதி பப்படி, மசால் தோசை, வெங்காய பஜ்ஜி, ரவா தோசை, மங்களூர் போண்டா, காஞ்சீபுரம் இட்லி, மிளகாய்ப் பொடி ....
என்னென்ன அயிட்டம் இருக்குன்னு சொல்றது என் வேலை ஸார்! நீங்க ஏன் சிரமப் படறீங்க?


இல்லேப்பா; இதையெல்லாம் எனக்குச் சாப்பிடக் கொண்டா!


பத்து தட்டுக்குமேல் அல்வா அமுக்கிவிட்டு, பதினைந்து தோசை ... அழுது விட்டு, ... நடந்தான் ஜக்கு.
ஆஹா! இவன் பிச்சுமணி வீட்டை யல்லவா நெருங்குகிறேன்! ஜாக்பாட் அடித்தான் போறது! ஆனால் இது என் தம்பியை விழுந்து காயப்படுத்தாமல் இருக்கணும், பகவானே!


பி.க.பி.ம.வின் ஆசைக்குள்ளே...
எங்கே வந்தே, ஜக்கு? நீ சொல்ல வேணும், எனக்கே தெரியும்! இதைத் தேடித் தானே? இன்னைக் கையிலே டாஸ் அடிக்கிற தையும் பார்த்துக்கோ! மேலே ஒரு அடி எடுத்து வைக்காதே! ஜாக்! ஒரே ஜதக்!

# ஆம்கோ பாட்டரியை உபயோகிக்கத் தொடங்கிடுவீர்



# மறந்திடுவீர் பாட்டரி தொல்லையை

ஆம். இடர்ப்பாடுகள் இனி இல்லை. வழியில் கார் செயலிழந்து நிற்க, கடுந்தொல்லைகளுக்கு ஆளாக வேண்டியதில்லை. ஆம்கோ பாட்டரி உன்னதமாக இயங்கி உயரிய தன்னம்பிக்கையை உங்களுக்குத் தருகிறது. காரோட்டுவதைப் பேரானந்தமாக ஆக்குகிறது.

இத்துறையில் முன்னோடிகளான ஆம்கோ பாட்டரீஸ் நவீன தொழில்நுட்பத்துடன் கடுமையான தரக்கட்டுப்பாட்டையும் இணைத்து, ஏறக்குறைய நாற்பது ஆண்டு அனுபவத்தையும் அதனுள் செலுத்தி, ஒவ்வொரு பாட்டரியையும் உருவாக்குகின்றனர். உங்கள் தேவைக்கு ஏற்றதொரு ஆம்கோ பாட்டரி உண்டு. சிறந்ததையே உபயோகிக்கத் தொடங்குவீர். ஆம்கோ பொருத்திடுவீர். உறுதியுடனே; நீடித்த உழைப்பையும் அது வழங்கிடுமே.

**ஆம்கோ பாட்டரீஸ் லிட்.,**
யூனிடி பில்டிங்ஸ், பெங்களூர்-2.




MAC(B) AM-98 TAM



# தெய்வாம்சம்

எஞ்ஜினீயரிங் பரீட்சையில் முதலாவதாகத் தேறிய குமாரின் படம் பத்திரிகையில் வரவில்லையென்றால், அவனை ராதாவுக்கு ஏற்ற வரனாகத் தேர்ந்தெடுக்கும் யோசனை ராஜுவுக்குத் தோன்றியிராது; ராதாவுக்கும் குமாருக்கும் திருமணம் ஆகாமல் இருந்திருந்தால், தொழிலதிபர் முத்தையாவின் லட்சியக் குடும்பம் சிதறிப் போயிராது; அந்தக் குடும்பம் சிதறிப் போயிரா விட்டால் ராஜுவின் பெருமை வெளிப்பட்டிருக்காது; ராஜுவின் பெருமை வெளிப்படாமல் இருந்திருந்தால், குமார் அவனிடம் பொறாமை கொண்டு தொழிற்சாலையையே வெடி வைத்துத் தகர்க்கும் பயங்கர முயற்சியில் இறங்கியிருக்கமாட்டான்; குமார் அந்தச் சதிச் செயலில் இறங்கியிராவிட்டால், ராதா அவனைத் தண்டித்துத் தன்னையும் மாய்த்துக் கொண்டு அதன் மூலம் தெய்வாம்சம் அடைந்திருக்க முடியாது.

ஜெயம் கம்பைன்ஸ் தயாரிப்பான ''தெய்வாம்ச''த்தில் கதையம்சம் நிறைய இருப்பதால் விறுவிறுப்பா யிருக்கிறது.

தொழிலதிபர் முத்தையா நேர்மையானவர்; தம்மை வளர்த்து ஆளாக்கிய தமக்கையிடம் தாயன்பு வைத்திருப்பவர்; தொழிலாளர்களிடம் தந்தைப் பாசம் வைத்திருப்பவர்; எதிலும் கண்டிப்பானவர் — இப்படிச் சொன்ன பிறகு மேஜர் சுந்தரராஜன்தான் இந்தப் பாத்திரத்தை ஏற்கத் தகுந்தவர் என்று வெளிப்படையாகச் சொல்ல வேண்டுமா, என்ன? அவர் இந்தப் பாத்திரத்துக்குத் தனியொரு சிறப்பை அளித்து விட்டார்.

ராஜுவின் பாத்திரம் இன்றியமையாதது. திரைப்படத்தின் திருப்பத்துக்குப் பெரிதும் உதவுவது. ஏவி. எம். ராஜன் அதை ஏற்றுத் தம் நடிப்புத் திறமையினால் ஒரு திருப்பத்தை ஏற்படுத்தி யிருக்கிறார்.

சந்திரகலா கதாநாயகி. கவர்ச்சியோடு கனிவையும் காட்டி நடித்திருக்கிறார். பி. ஆர். வரலட்சுமிக்கு நல்ல எதிர்காலம் இருக்கிறது.

சசிகுமார், வசனங்களைப் பாடம் பண்ணிப் பள்ளி மாணவன் மாதிரி ஒப்பிக்கிறார். வசனங்களுக்கும், சந்தர்ப்பங்களுக்கும் ஏற்றபடி முக பாவங்களையும் மாற்றிக் கொள்ளுவது தானே நடிப்புக் கலையின் முதல் பாடம்? அவருக்கு அது வரவில்லையே, என்ன செய்யலாம்?

''தெய்வாம்ச''த்தில் மிகவும் ரஸமாகத் தற்கால அரசியலை இலேசாகப் படர விட்டிருக்கிறார்கள். நீண்ட கால இடைவெளிக்குப் பின் திரையில் தோன்றும் குலதெய்வம் ராஜகோபால் தம் அழுத்தம் திருத்தமான பேச்சினாலும், அநுபவம் மிக்க நடிப்பினாலும் அந்த அரசியல் கலவைக்கு மணம் ஊட்டியிருக்கிறார். கையில் பையுடன் அவர் போடும் பீடு நடை ஒன்றே போதும்! தேங்காய் சீனிவாசன் அவ்வப்போது 'வத்தி வைத்து', சின்ன முதலாளிக்கு மாலை போட்டு, காக்காய் பிடித்து அரசியலை வளர்த்திருப்பதோடு படத்தின் சுவையையும் வளர்த்திருக்கிறார்.

பழங்கால நடிகை டி. வி. குமுதினியின் நடிப்பு மிக மிக இயல்பாக அமைந்து சோபித்திருக்கிறது. கௌரவ நடிகர் வி. எஸ். ராகவன் கடமை உணர்வும், கௌரவமும் கொண்ட தொழிலாளராக வந்து அபாரமாக நடித்திருக்கிறார்.

'வியட்நாம் வீடு' சுந்தரத்தின் வசனம் அருமையாயிருக்கிறது. கே. விஜயனின் டைரக்ஷன் பாராட்டும்படியா யிருக்கிறது.

குமாரி சச்சு, வீரப்பன், தேங்காய் சீனிவாசன் தோன்றும் காமெடிக் காட்சிகள் பரவாயில்லை. பார்த்துச் சிரிக்கலாம்! அவர்களுடன் வரும் நாய் நன்றாய் நடித்திருக்கிறது.

பாடல்கள் திருஷ்டி பரிகாரம்! இனி வரும் காலத்தில் பாடல்களையே தமிழ்ப் படங்களில் நிறுத்தி விட்டால் மக்கள் வருத்தப் பட மாட்டார்கள். மாறாகச் சந்தோஷப்படுவார்கள்! படத்தின் சுவையும் கூடுதலாகும்.

கதாநாயகன், கதாநாயகி இருவரையும் துணிந்து தீர்த்துக் கட்டித் தமிழ்த் திரைப்பட உலகில் ஒரு திருப்புமுனையாக அமைந்து விட்டது ''தெய்வாம்சம்''. பாராட்டுக்குரிய மாறுதல்தான்! —காந்தன்









1. எம். சி. சி. குழு காப்டன் லூயிஸ், பேடி வீசிய பந்தில் சோல்கரிடம் 'காட்ச்' கொடுத்துவிட்டார்! 2. சோல்கரின் விக்கெட்டை ஸ்பின்னர் போகாக் வீழ்த்துகிறார். காட்ச் பிடித்தவர் விக்கெட் கீப்பர் நாட். 3. ஏழு விக்கெட்களை வீழ்த்தி வெற்றிக்கு வழி வகுத்த பௌலர் சந்திரசேகர். 4. இன்ஜினியர் விக்கெட் கீப்பர் மட்டுமல்ல; பாட்ஸ்மனும் கூடத்தான்! 5. முதல் இன்னிங்ஸில் 37 ரன்களில் விசுவநாத் போகாக் பந்தில் ஓல்டுக்குக் காட்ச் கொடுத்தார்.

## சென்னை டெஸ்ட்







6. ஸ்பின்னர் பேடி செய்த பௌலிங் அற்புதம். 7. 76 ரன்களுக்கு மேல் எடுக்க விடாமல் டென்னைஸைப் பிரஸன்னா வீசிய பந்தில்









ஸோல்கர் காட்ச் பிடித்து அபார ஆட்டத்துக்கு முற்றுப்புள்ளி வைத்தார். 8. காப்டன் வாடேகர் ஆட்டம். 9. எம்.ஸி.ஸி. ஃபாஸ்ட் பௌலர் ஆர்னல்ட். 10. வெற்றிக்கு நின்று ஆடிய துரானி போலக் பந்தில் எல். பி. டபிள்யூ ஆனார். 11. லோகலிக்கல் ஆட்டம் ஆடிய பட்டாடி நவாப்.

படங்கள்: கே. விஸ்வநாத்




கிரிக்கெட் வீரர்கள், என்றும் கண்டிராதபடி சென்னை டெஸ்டில் ஒன்பது 'ஸிக்ஸர்கள்' அடித்தார்கள். எம். ஸி. ஸி. கிரிக்கெட் குழுவைச் சேர்ந்த ஜொலிக்கல் பாட்ஸ்மன் ப்ளெச்சர் அடித்த நாலு ஸிக்ஸர்களும் நம் கண்களை விட்டு மறையாது. பட்டம் 'பறி' போனாலும், தேர்தல் 'பறி' போனாலும், ஆட்டம் பறி போகாது என்று காட்டிய பட்டோடி நவாப்பின் இரு ஸிக்ஸர்கள் தான் கண்களை விட்டு அகலுமா? பெங்களூரில் சதம் (நாட் அவுட்) கண்ட பட்டோடி நவாப்புக்கு அதுவே சென்னை டெஸ்டுக்கு நுழைவுச் சீட்டாயிற்று.

கல்கத்தா டெஸ்டில் 'நுழைவு' பெற்ற அதிர்ஷ்டக்கார ஆல்ரௌண்டர் துரானி கல்கத்தா டெஸ்டுக்குப் பாடுபட்டதோடு, சென்னை டெஸ்ட் வெற்றிக்கும் பாடுபட்டார். அவர் அடித்த மூன்று ஸிக்ஸர்கள் பற்றி மூன்று தலைமுறைகளுக்குக் கூறி மகிழலாம்!

☐ விக்கெட் கீப்பிங்கில் சூரப்புலி என்று புகழ் பெற்ற நாட், கிரிக்கெட் மைதானத்துக்குள் நுழைந்ததும் 'பெயில்ஸ்'களைத் தொட்டு மரியாதை செலுத்தி விட்டு, ஆட்டத்தில் பங்கேற்பது வழக்கமாம்! அவ்வாறிருக்க, அம்பயர் ஒரு 'காட்ச்'சைக் கால தாமதமாகச் சொன்னதற்காகக் கத்தித் தம் கைகளிலுள்ள கை உறைகளை நாட் தரையில் தூக்கி எறிந்து அவமரியாதை செலுத்தியது ஏனோ ?

☐ பூஜ்யத்தில் ஆட்டத்தைத் தொடங்கினால் அபசகுனமோ என்று தோன்றும். முதலில் சௌஹான் பூஜ்யத்தைத் தொடங்கி, 'பூஜ்யராகி'ப் போனாலும், அதுவே பூஜை போட்டது போலாகி விட்டது ! இறுதி ஆட்டக்காரர்கள் முதல்தர பாட்ஸ்மன்களைப் போல் அபாரமாக ஆடி இந்திய எண்ணிக்கையை 316க்கு உயர்த்தி வெற்றிக்கு அஸ்திவார மிட்டனர். தலை போய் வாலாடிய கதை!

☐ மைதானத்தில் பிரும்மாண்டமான ராஜராஜ சோழன் படத்துக்கான பானர் செலக்டர்களின் கவனத்தையும் கவர்ந்தது. செலக்டர்கள் சேர்மன் கோபிநாத் ''தஞ்சை மன்னன் ராஜராஜ சோழன் தமிழக மன்னர்களிலே முக்கியமானவர். தஞ்சைக் கோயில் ரொம்பப் பிரசித்தமானது. அங்குள்ள நந்தி பெரிசு!'' என்று செலக்டர்களுக்கு விளக்கினார்.

நந்தி என்றதும் நினைவு வருகிறது. வேங்கடராகவனுக்கு நந்தியாக விளங்கி வழி மறைத்தது எதுவோ ? டெஸ்ட்களில் 82 விக்கெட்கள் கண்ட தமிழக ஸ்டார் வேங்கடராகவன், சென்னை டெஸ்டில் இடம் பெறாதது பலருக்கு நியாயமான வியப்பைத் தந்தது.

☐ இவர் பெயர் ஓல்ட்! ஆனால் எம். ஸி. ஸி குழுவிலேயே இவர்தான் பேபி — இளைஞர். இவர் தம் சகோதரர் ஆலன் ஓல்டின் கடுமையான விமரிசனத்தில் வளர்ந்தவர். இவர் சிறுவராக இருந்தாலும், இடக்கரத்தினராக இருந்ததாலும் இவரது சகோதரர்கள் இவரை ஒதுக்கினார்கள். கடைசியில் ஒரு நாள் அவரது சகோதரர் ஓல்டைப் பந்து வீச அனுமதித்தார். அதற்கு அவர் கூறிய காரணம் இவரை அவமதிப்பதுபோல்தான் இருந்தது. ''இன்று பந்து வீச வேறு யாருமில்லை. நீதான் பந்து வீசவேண்டும் !'' என்றாராம்! இவ்வாறு குட்டுப்பட்டு ஆடத் தொடங்கியவர்தான் இங்கு! விட்டுக் கொடுக்காமல் இறுதி வரை போராடினார். போகாக்கும், கிப்போர்டும் தம் ஸ்பின் பௌலிங்கினால் இந்திய வெற்றிக்கு முட்டுக்கட்டை போட்டு அது விரைவில் கிட்டாதவாறு செய்ததுடன் மகத்தான வெற்றியாக இல்லாமலும் செய்துவிட்டனர்.

☐ இன்ஷ்யூரன்ஸ் புரோக்கர் மைக் டென்னஸ் ஸ்காட்லாந்துக்காரர். நின்று ஆடித் தம் 76 ரன்களால் எம். ஸி.ஸி. கிரிக்கெட் குழுவின் தோல்வி படுதோல்வியாகி விடாமல் தடுத்தவர். பிரஸன்னா ரொம்பப் பொல்லாதவர். செஞ்சுரி அடித்துவிட

மேலே: பந்தைத் தாக்குகிறார் பிரஸன்னா. கீழே: '' ஆட்டக்காரர்கள் படங்களை நிறையப் பார்த்திருப்பீர்கள்; அவர்களை ஆடத் தேர்ந்தெடுத்த 'செலக்டர்'களைப் பாருங்கள் '' என்கிறார் நமது நகைச்சுவைச் சித்திரக்காரர் சாமா. எதிர்ப் பக்கம்: 1. நாட்டின் கிளவ்ஸ் படும் பாடு. 2. பட்டோடியின் பண்பாடு — தொப்பி பொறுக்கித் தருதல். 3-6. ஆட்டம் தொடங்கு முன் இங்கிலாந்து ஆட்டக்காரர்களின் உடற்பயிற்சிகள்.



முயன்ற மைக் டென்னலை முக்கால் செஞ்சுரியோடு திருப்பி அனுப்பி வைத்துத் 'திரும்புமுனை' கண்டார்!

□ இந்த டெஸ்ட் மாட்சில் பதினாறு காட்ச்களினாலே எம். ஸி. ஸி. குழுவினரை இந்திய கோஷ்டியினர் 'அவுட்'டாக்கி யிருக்கிறார்கள். அதிக காட்ச்கள் பிடித்து 'பீல்டிங் புகழ்' தட்டிக் கொண்டவர் ஸோல்கர். அவர் பிடித்த அபாரமான 'காட்ச்'கள் ஐந்து!

□ பௌலிங்கினால் எம். ஸி.ஸி. கோஷ்டியிடமிருந்து வெற்றியைப் பறிக்க முடியும் என்பதை நிரூபித்துக் காட்டியவர்கள் சந்திர சேகர் — பேடி — பிரசன்னா ஆகிய மூவரும். சந்திரசேகர் ஏழு விக்கெட்களும், பேடி ஆறு விக்கெட்களும், பிரஸன்னா ஆறு விக் கெட்களும் எடுத்து ஆட்டத்தை வெற்றி முனைக்குத் திருப்பினர். சென்னை செப்பாக்கத்தில் சந்திரசேகர் நூறாவது விக்கெட் (அமிஸ் ஸுடையது) எடுத்துப் புகழ் பெற்றார். அவரைச் சுசக்கிப் பிழிந்து உதறி உலர்த்தியாகிவிட்டது இந்த டெஸ்டில். நாலாவது நாள் அவர் பந்து வீச ஓடி வரும் தொடக்க கட்டத்துக்கு ஒவ்வொரு முறை திரும்பி நடந்த போதும் எத்தனை களைத்துக் காணப்பட் டார்! வேகமாகப் பந்து வீசும் நபர்கள் இல்லாதது பெரிய குறை.

□ மேற்கிந்தியத் தீவு, இங்கிலாந்து வெற்றிகள் பெற்றுத் தாயகம் திரும்பிய காப்டன் வாடேகருக்கு வரவேற்புக் கொடுத்தபோது அவர் கூறினாராம் : ''சின்ன வயசில் நானும் எனது நண்பர்களும் மாங்காய்த் தோப்புக்குள் சென்று மாங்காய்களைக் கல் எறிந்து அடித்துப் பறித்துத் தின்போம். தோட்டக்காரன் வந்துவிட்டால் ஒரே பாய்ச்சலில் வேலியைத் தாண்டி ஓடுவோம். இது எனக்குக் கிரிக்கெட் மைதானத்தில் 'ரன்'கள் எடுக்க உதவுகிறது!''

இரண்டாம் இன்னிங்ஸில் காப்டன் வாடேகர் பூஜ்யத்துடன் மைதானத்தை விட்டு 'ரன்' எடுத்தபோது ரொம்பவும் கஷ்டமா யிருந்தது. இந்திய கோஷ்டியின் வெற்றி மாங்காயை எம்.ஸி.ஸி. குழுவினர் தட்டிப் பறித்துக் கொண்டு விடுவார்களோ என்று பயம் எழுந்தது. துரானியும் சௌஹானும் பத்திரமாக 'வெற்றி மாங்காய்' பறி போகாமல் பாதுகாத்துத் தந்தார்கள். இறுதி வரை எம். ஸி. ஸி. குழுவினர் வெற்றிக்குத் 'தடை' போட்ட அற்புதத்தைக் கண்டு அதிசயிக்காதவர் இல்லை. இரு கோஷ்டிகளும் கடுமையாக மோதிக் கொண்டதில் நல்ல ஆட்டத்தைப் பெற்ற நாற்பத்தையாயிரம் ரஸிகர்கள் பாக்கியசாலிகளானார்கள்.

□ சென்னை சேப்பாக்கம் மைதானத்தில் கிரிக்கெட் விருந்துக்கு ஏற் பாடுசெய்த திரு எம். ஏ. சிதம்பரம் வந்திருந்த எம்.ஸி.ஸி. குழுவின ருக்கும் இந்திய கோஷ்டியினருக்கும் சுவையான விருந்து அளித்த தோடு தமிழக நாடோடிக் கலைகளான கரகம், காவடி ஆட்டங் களைப் பார்வையிட வாய்ப்பும் ஏற்படுத்தித் தந்து மகிழ்வித்தார். தமிழக போலீஸ் படையைச் சேர்ந்த கரக ஆட்டக்காரர்கள் கரகம் ஆடியபடியே கண்களைக் கட்டிக் கொண்டு தேங்காய் உடைத்ததும், வாழைக்காய் வெட்டியதும் எம்.ஸி.ஸி. குழுவினரை வியப்பில் ஆழ்த்தின. இக்கலை நிகழ்ச்சிக்குப் பிறகு இரு கோஷ்டி காப்டன்களுமே காவடி (வெற்றிக்கு) தூக்க வேண்டும் என்று அன்புக் கட்டளையிட்டார் திரு சிதம்பரம். இரு காப்டன்களுமே இன்முகத் தோடு இதற்கு இசையவே கிரிக்கெட் பக்தர்களுக்கு ஒரே குதூகலம்!

கரகம் காவடி மட்டுமல்லாமல், ஓய்வு தினத்தன்று மாலை கர்நாடக இசையையும் கேட்டு மகிழ்ந்தார் காப்டன் டோனி லூயிஸ். வயலின் விற்பன்னரான இவர், கிண்டி ஐ. ஐ. டி.யில் நடந்த லால்குடி திரு ஜெயராமன் கச்சேரிக்குப் பட்டோடியுடன் போய் ஒரு மணி நேரம் இருந்தார். 'எங்களுக்கு அளிக்கப்படும் ஒரு விருந்துபசாரத்துக்கு அவசியம் போக வேண்டி யிருப்பதால் இடை யில் செல்கிறேன். தவறாக எண்ண வேண்டாம்' என்று வித்துவா னிடம் கூறி விடைபெற்றார் இந்தப் பண்பாளர். இத்தனை கண்ணி யத்தை வேறு சில ஆட்டக்காரர்களிடம் காண முடியாமல் போயிற்றே. பட்டாக வெடித்து ஆட்டக்காரர்களை நிதானம் தவறச் செய்த ரசிகர்களையும் நொந்து கொள்ளவே தோன்றுகிறது.

□ இரண்டாவது இன்னிங்ஸில் நமது பாட்ஸ்மன்கள் இத்தனை அலட்சியமாக ஆடி விக்கெட்டுக்களை வாரிக் கொடுக்காமல் இருந் திருந்தால் சென்னை டெஸ்ட் வெற்றி உண்மையிலேயே பெருமிதத் துக்குரிய வெற்றியாக இருந்திருக்கும். ஆனால் இப்போதோ அது இங்கிலாந்து கோஷ்டிக்குப் பெருமிதத்துக்குரிய தோல்வியாக விளங்குகிறது.

— குண்டுமணி








நீலமாருயல் உடன் செல்வது யாரோ நிர்லான் துணையோடு?




தலைசிறந்த ஆலைகள் உபயோகிப்பது **நிர்லான்** நூல்.

முப்பதாவது அத்தியாயம்

# சத்திய வெள்ளம்



நா.பார்த்தசாரதி

அன்று அவர்கள் 'பிக்னிக்'குக்காகப் புறப்பட்டு வந்திருந்த இடம் மல்லிகைப் பந்தலைச் சுற்றி இருந்த மலைப் பகுதிகளிலேயே மிகவும் அழகான இடம். சுற்றிலும் மலைச் சிகரங்களின் பசுமைச் செழிப்புக்கு நடுவே தற்செயலாக உதறிப் போட்ட பச்சை வெல்வெட் துணியில் நடுவே கண்ணாடி பதித்தது போல் கரடியாறு நீர்த் தேக்கம் அமைந்திருந்தது. மல்லிகைப் பந்தல் நகரிலிருந்து அரை மணிநேரப் பயணத்தில் போய்ச் சேர முடிந்த தொலைவில் அந்த நீர்த் தேக்கப் பகுதி இருந்தாலும் அவர்கள் நடுநடுவே நின்றும், சிரித்தும், பேசியும், உல்லாசமாகவும், மெதுவாகவும் சென்றதால் நீர்த் தேக்கத்தை அடைய ஒரு மணி நேரம் ஆயிற்று. புறப்படும் முன்பாக எல்லாரும் வெறும் காப்பி மட்டுமே பருகியிருந்ததால் போய்ச் சேர்ந்ததுமே பசி தீரச் சிற்றுண்டியை முடித்துக் கொண்டார்கள். அப்புறம் மாணவர்களும், மாணவிகளும் தனித் தனிக் குழுக்களாகப் பிரிந்து பேச்சு, விளையாட்டு, பாட்டு, இசைக் கருவிகள் என்று அவரவர்களுக்குப் பிடித்த காரியங்களில் ஈடுபடத் தொடங்கினர். அங்கே பக்கத்தில் ஓர் அருவியில் நிறையத் தண்ணீர் விழுந்து கொண்டிருந்தது. அதன் வெண்மை பச்சைநிற மலைமகள் வெளேர் என்று முத்துமாலை சூட்டிக் கொண்டிருப்பது போல் பார்ப்பவர் கண்களைக் கவர்ந்தது.

கண்ணுக்கினியாளுக்கும் அவளோடு வந்திருந்த தோழிகள் இரண்டொருவருக்கும் அருவியில் குளிக்க வேண்டும் என்ற ஆசை வரவே இட்டிலிக்காகக் கொண்டு வந்து மீதமிருந்த நல்லெண்ணெயைத் தலையில் வைத்துக் கொண்டு நீராடப் புறப்பட்டுவிட்டார்கள். அந்தப் பக்கத்தில் புல்வெளி நிறைய மான்கள் உலாவிக் கொண்டிருந்தன. அவற்றில் ஈன்று சில நாட்களே ஆன மிகச் சிறிய புள்ளிமான் மறி ஒன்று தத்தித் தத்தி நடந்துகொண்டிருந்தது. அருவியில் நீராடப் புறப்பட்ட பாண்டியன் அந்த இளம் மான் கன்றை இரு கைகளாலும் தூக்கி மார்போடு அணைத்தவாறே கண்ணுக்கினியாளின் முன்பு வந்தான். அவள் அவன் எதிரே வந்த கோலத்தைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே கேட்டான்:

''ஏது மான்களைப் பிடிக்கத் தொடங்கி விட்டாற்போல் இருக்கிறதே!...''

''என்ன செய்வது? இது சாது மான்! உடனே பிடிபட்டு விட்டது! வேறு சில மான்கள் இருக்கின்றன. அவை எவ்வளவு முயன்றாலும் பிடிபடுவதில்லை?''

''இது சிலேடையாக்கும்....?''

''நீ எப்படி எடுத்துக் கொள்கிறாயோ அப்படி......''

''மாணவிகள் நீராடப் போகும் இடத்துக்கு மாணவர்கள் வரக்கூடாது. ஞாபகமிருக்கட்டும்...''

''இங்கு இருப்பது ஓர் அருவிதான்! அதில்தான் மாணவர்கள் மாணவிகள் எல்லாருமே நீராடியாக வேண்டும்...''

''மர்ணவிகள் நீராடி முடிகிற வரையில் நீங்கள் இந்தப் பக்கமே வரக்கூடாது.......''

''நான் மானைத் தேடிக் கொண்டு வந்தேன்.''

''இது ரொம்பவும் பழைய 'வள்ளி திருமண டெக்னிக்'! வேறு ஏதாவது புதிதாகப் பேசுங்கள். காப்பியடிக்காதீர்கள்....''

''நான் ஒன்றும் 'காயாத கானகத்தே' பாடவில்லையே?''

''நீங்கள் பாடினால் நான் இங்கே நிற்க முடியாது.''

சொல்லிவிட்டு அவள் சிரித்தான். அவன் மானைக் கிழே புல் தரையில் விட்டுவிட்டு அவளிடம் வலது உள்ளங் கையைக் குழிவாக நீட்டித் தலைக்கு வைத்துக் கொள்ளக் கொஞ்சம் எண்ணெய் வாங்கிக் கொண்டான்.

அருவி நீராடலுக்குப்பின் உடம்பு சலவைக்குப் போட்டு எடுத்ததுபோல் இலேசாகிப் பசி வயிற்றைக் கிள்ளியது. காலையில் கொண்டு வந்திருந்த சிற்றுண்டிப் பொட்டலங்கள் எல்லாம் தீர்ந்திருந்தன. அணைக்கட்டு ஊழியர் குடியிருப்பையும் இன்ஸ்பெக்ஷன் பங்களாவை

யும் ஒட்டியிருந்த கான்டீனில் பகல் உணவுக்காக ஏற்பாடு செய்யலாமா அல்லது மல்லிகைப் பந்தலுக்கே திரும்பிவிடலாமா என்று பாண்டியன் முதலிய மாணவர்கள் சிந்தித்துத் தயங்கிக் கொண்டிருந்தபோது அண்ணாச்சி எதிர்பாராத விதமாக ஒரு ஜீப்பில் வந்து இறங்கினார்.

''சைக்கிள்களை எல்லாம் நீங்க இங்கே எடுத்துக்கிட்டு வந்துட்டதாலே கடையிலேயும் வேலை இல்லே. நீங்க கொண்டாந்த டிபன் பொட்டலம் போதாதுன்னு தோணிச்சு. மறுபடியும் சங்கர் பவன் அய்யருகிட்டச் சொல்லிப் புளியோதரை, தேங்காய்ச் சாதம், மசால் வடை எல்லாம் போடச் சொல்லிச் சுடச்சுட வாங்கியாந்திருக்கேன். நியூஸ் பேப்பர் பார்஑லுக வந்து வாடிக்கைக்காரங்களுக்குக் கொண்டு போய்ப் போட்டானதும், நேரே சங்கர் பவனுக்கு வந்து இதெல்லாம் ஏற்பாடு பண்ணி ஒரு தெரிஞ்ச பார்ட்டிகிட்டே ஜீப்புக்கும் வழி செஞ்சப்புறம் பொறப்பிட்டு வந்தேன்'' என்றார் அண்ணாச்சி.

''நீங்க ஏன் இவ்வளவு சிரமப்படணும் அண்ணாச்சி?'' என்று பாண்டியன் அவரைக் கடிந்து கொள்ளத் தொடங்கியபோது அவருக்கு அவன்மேல் கோபமே வந்து விட்டது.

'' நீ சும்மா இரு தம்பி! சிரமம் என்ன பெரிய சிரமம்? என்னோட வாழ்க்கையிலே சந்தோஷமே இதுதான். மல்லிகைப் பந்தல்லே கடையின்னு ஒண்ணைத் திறந்த நாளிலே இருந்து அங்கே படிக்க வார புள்ளைகளுக்கு உபகாரம் பண்றதுதான் எனக்குச் சந்தோஷமாயிருந்திருக்கு. பணம் இல்லாமே ஹாஸ்டல் ஃபீஸ் கட்டமுடியாமத் திண்டாடியிருக்கிற எத்தினி பசங்களுக்கு என் கையிலேருந்து பணம் கட்டியிருப்பேன் தெரியுமா? அதை எல்லாம் சிரமம்னு நினைச்சா நான் செஞ்சிருக்க முடியுமா?''

அப்போது அண்ணாச்சியை எதிர்த்துப் பேச முடியாமல் அவருடைய அன்புக்குக் கட்டுப்பட்டு நின்றான் பாண்டியன். பிறருக்காகச் சிரமப்படுவதிலேயே தங்கள் வாழ்க்கையை மகிழ்ச்சியாக்கிக் கொள்ளும் சிலரும், பிறரைச் சிரமப்படுத்துவதிலேயே தங்கள் வாழ்க்கையும், பிறர் வாழ்க்கையும் அழியும்படி செய்கிற சிலரும் நிறைந்த உலகில் அண்ணாச்சி முதல் வகைக்கு முதல் உதாரணமாயிருந்தார். தொண்டு செய்வதையே ஒரு தவம்போல் பழகியிருந்த அவரால் சும்மா இருக்க முடியாதென்று அவனுக்குப் புரிந்தது. வைரம் பாய்ந்த அந்த முரட்டு உடம்புக்குள் இருக்கும் மலர் போன்ற இதயத்தை அவன் வியந்தான். மாணவர்களை உட்கார வைத்து அண்ணாச்சியும் அவரோடு வந்திருந்த ஜீப் டிரைவரும் உபசரித்து உணவு பரிமாறினார்கள். அது முடிந்ததும் அண்ணாச்சியை உட்கார வைத்து மாணவர்கள் உணவு பரிமாறினார்கள். போட்டி போட்டுக் கொண்டு அன்பாக உபசரித்தார்கள்.

சிறிது நேரம் அவர்களோடு பேசிக் கொண்டிருந்துவிட்டு ஜீப்பில் திரும்பினார் அண்ணாச்சி. புறப்படுவதற்கு முன்னால், ''ரொம்ப நேரம் தங்க வேணாம்! பொழுது சாயறப்ப அணை ஓரமா தண்ணி குடிக்க யானைக் கூட்டம் இறங்கும். அதுக்குள்ளே திரும்பிடுங்க'' என்று பாண்டியனிடம் எச்சரித்துவிட்டுப் போனார் அவர்.

மாலை மூன்று மணிவரை கரடியாறு நீர்த் தேக்கத்தில் பொழுது போக்கி விட்டுத் திரும்பினார்கள் அவர்கள். திரும்பும் போது இறங்கு முகமாகையினால் போகும் போதில் ஆன நேரத்தில் சரிபாதி நேரத்துக்குள்ளேயே வேகமாகத் திரும்பி விட்டாற்போலிருந்தது.

அந்தப் 'பிக்னிக்'கில் கதிரேசன் கலந்து கொள்ளவில்லை. 'பிக்னிக்' முடிந்த தினத்துக்கு மறுநாள் மாலை நிலக்கோட்டை டிரில் மாஸ்டர் பிச்சைமுத்து மல்லிகைப் பந்தலுக்கு வந்திருந்தார். அவர் கதிரேசனுடன் தங்கினார். அன்றிரவு கதிரேசன் அவரைச் சந்திப்பதற்காகச் சில முக்கிய மாணவர்களைத் தன் வீட்டுக்கு அழைத்திருந்தான். பாண்டியன், மோகன்தாஸ், பொன்னையா, நடனசுந்தரம் — எல்லாரும் போயிருந்தார்கள். பிச்சைமுத்து கூறினார்: ''நம்மிடையே வர்க்கபேதத்தை ஒழித்துச் சுரண்டல் அற்ற சமுதாயத்தை அமைக்கிறவரை ஏகாதிபத்தியம் எந்த உருவிலாவது இருந்தே தீரும். இரத்த வெள்ளத்தில்தான் புரட்சிப் பூக்கள் மலர வேண்டும். மாணவர்களாகிய நீங்கள் இன்னும் தீவிரமாக மாறித்தான் உங்கள் பிரச்னைகளைத் தீர்த்துக் கொள்ள முடியும். எந்த வழியிலாவது நமது இலட்சியத்தை அடைந்தே ஆக



வேண்டும்! முடிவே முக்கியம். வழிகள் அல்ல! வழிகளை முடிவு நியாயப்படுத்திவிடும்...''

''இலட்சியம் எவ்வளவு முக்கியமோ, அவ்வளவு முக்கியமாகவும் நியாயமாகவும் அதை அடையும் மார்க்கமும் இருக்க வேண்டும் அல்லவா?'' என்று பாண்டியன் அவரைக் கேட்டான். அவர் பதில் சொல்லாமல் அவனைப் பார்த்துச் சிரித்தார். ஒரிரு நிமிஷங்களுக்குப் பின் ''மணவாளனைப் போன்றவர்கள் உங்களுக்கு அப்படிச் சொல்லிக் கொடுத்திருக்கலாம். அந்தக் கருத்தை நீங்கள் மாற்றிக் கொள்ளப் பழக வேண்டும். முடிவுகள் மார்க்கங்களை நியாயப் படுத்திவிடும்'' என்றார் பிச்சைமுத்து. மணவாளனைவிடத் தம்மை முற்போக்கானவர் என்று காட்டிக் கொள்ள அவர் முயல்வது பாண்டியனுக்குப் புரிந்தது. அதை ஒட்டி அவருக்கும் பாண்டியனுக்கும் வாக்குவாதம் வளர்ந்தது. அவர் தர்க்கரீதியாகப் பதில் சொன்னாலும் அதிலிருந்த அளவு மீறிய வேகம் அவனுக்குப் புரியவில்லை. கதிரேசனும், வேறு சில மாணவர்களுமோ பிச்சைமுத்து சொல்வதுதான் சரி என்றார்கள். பாண்டியன் அதில் கருத்து வேறுபட்டுத் தயங்கினான். பிச்சைமுத்து தங்கியிருந்த இரு நாட்களும் கதிரேசன் தனித் தனியே பல விடுதி அறைகளுக்கு அவரை நடு இரவிலும், அதிகாலையிலும் அழைத்துச் சென்று ஒற்றையாகவும்,



குழுக்களாகவும் மாணவர்களைச் சந்திக்க வைத்தான். வேளாண்மைப் பட்டப் பிரிவிலும், பொறியியல் பட்டப் பிரிவிலும் நிறைய மாணவர்களைச் சந்தித்தார் அவர். அவர் மல்லிகைப் பந்தலுக்கு வந்து விட்டு ஊர் திரும்பிய தினத்திலிருந்து கதிரேசன் பாண்டியனைப் பார்ப்பதை நிறுத்திவிட்டான். தனக்கும் கதிரேசனுக்கும் நடுவே இடைவெளி வளர்வது பாண்டியனுக்குப் புரிந்தது. பிச்சைமுத்து வந்து போனபின் கதிரேசனும் வேறுசில மாணவர்களும் இரவு பதினொரு மணி ஒரு மணி என்று வேளை கெட்ட வேளைகளில் போட் ஹவுஸ் அருகே, காடுகளில், மலைப்பகுதிகளில் தனித் தனியே இரகசியமாகச் சந்திப்பதாகவும், பேசுவதாகவும் பாண்டியன் கேள்விப்பட்டான். கதிரேசன் தலைமையில் ஒரு குழு தங்களிடமிருந்து பிரிந்திருப்பது பாண்டியனுக்குப் புரிந்தது. கதிரேசனும் அவன் நண்பர்களும் இப்போதெல்லாம் அண்ணாச்சி கடைப் பக்கம் வருவதை நிறுத்தி விட்டார்கள் என்பதும் தெரிந்தது.

## சத்திய வெள்ளம்



> எங்கே அன்பு வற்றுகிறதோ அங்கே வெறுப்பும், விரக்தியும் உடன் நிகழ்ச்சியாக உற்பத்தி ஆகின்றன. வெறுப்பில் அழிவுகள் கிளைக்கின்றன. அழிவுகளால் எதைத்தான் வளர்க்க முடியும்?

''ஒட்ட வெட்டிய கிராப்பும், மீசையுமா முதல் நாள் அந்தத் தம்பி கதிரேசன் இந்தப் பாதையா சிகரெட் பிடிச்சுக்கிட்டே நடந்து போனப்போ நானே கைதட்டிக் கூப்பிட்டேன். காது கேட்காதது போலப் போயிடிச்சு அது'' என்று அண்ணாச்சியே பாண்டியனிடம் ஒரு நாள் கூறியபோது அதை எப்படி அவருக்குச் சொல்லி விளக்குவது என்று பாண்டியனுக்குப் புரியவில்லை.

''சொந்தப் பகை எதுவும் இதில் இல்லை அண்ணாச்சி! வெறும் சித்தாந்தப் பகைதான். தீமைகளை எதிர்த்து அழித்துவிட்டுத் தீயவர்களை நம் வழிக்கு மாற்ற நினைக்கிறோம் நாம். அவர்களோ தீமைகளையும் தீயவர்களையும் சேர்த்தே அழித்துவிட நினைக்கிறார்கள்..'' என்று மெல்ல அந்த மாறுதலைப் பாண்டியன் அண்ணாச்சிக்கு விளக்கினான். உடனே மணவாளனுக்குத் தந்தி கொடுத்து அவரை வரவழைக்கச் சொன்னார் அண்ணாச்சி. பாண்டியன் தந்தி கொடுத்தான். மறு நாள் பகலில் மணவாளன் மதுரையிலிருந்து வந்து சேர்ந்தார். மணவாளன் தலைமையில் தேசியத் தொழிலாளர் யூனியன் கட்டிட ஹாலில் பல்கலைக்கழக மாணவர் கூட்டம் நடந்தது. அப்போது தெரிந்த ஒரு கணக்கின்படி ஐந்து சதவிகிதம் மாணவர்கள் கதிரேசன் தலைமையில் தீவிரவாதிகளாக அணி வகுத்திருப்பதையும், பதினைந்து சதவிகிதம் மாணவர்கள் மல்லை இராவணசாமி கட்சியின் சார்பாக இருப்பதையும் எந்தச் சார்பும் இல்லாத உதிரிகளாகப் பத்து சதவிகித மாணவர் இருப்பதையும், மீதியுள்ள எழுபது சதவிகிதம் தங்கள் பக்கம் இருப்பதையும் பாண்டியன் அறிந்தான்.

மணவாளன் பாண்டியனுக்கு ஆறுதல் கூறினார். ''கவலைப்படாதே! பிச்சைமுத்துவும் நீண்டநாள் தேசியவாதியாக இருந்துதான் சலிப்புற்றுத் தீவிரவாதியாகி விட்டார். அவரை வெறுக்க வேண்டிய அவசியமில்லை. நல்ல படிப்பாளி. சமூகக் கொடுமைகள் அவரைக் கோபக்காரராக்கி விட்டன. கதிரேசன் அவரால் கவரப்பட்டுவிடுவான் என்பதை 'அவன் அவரை நிலக்கோட்டையில் சந்தித்தான்' என்று முதல் முதலாக அறிந்தபோதே நான் எதிர்பார்த்தேன்.''

''அடைகிற மார்க்கம் முக்கியமில்லை எய்துகிற இலட்சியமே முக்கியம் என்கிறார் அவர்.''

''நமக்கு மார்க்கத்திலும் நம்பிக்கை இருக்கிறது. பொய்கள் கரையவேண்டும் என்பதோடு சத்தியம் பெருகவேண்டும் என்றும் சேர்த்தே ஆசைப்படுகிறோம் நாம். சத்தியம் பெருகுவதாலேயே பொய்கள் கரைய வேண்டும் என்பதும் நம் ஆசையாக இருக்கிறது.''

''பிச்சைமுத்து உங்களை அப்பட்டமான பிற்போக்குவாதி என்கிறார்.''

''சொல்லட்டுமே! நான் அவரை அப்படிச் சொல்ல மாட்டேன். அவர் பிற்போக்கு வாதியில்லை என்று புரிந்து கொள்கிற அளவு நான் முற்போக்கு வாதி என்பதையாவது அவர் அறிந்து கொண்டால் நல்லது. நிதானத்தையே அவர் பழிப்பதற்குத் தயாராக இருந்தால் என்னை மட்டும் அவர் எப்படிப் பழிக்காமல் விட்டு வைக்க முடியும்?'' என்று பொறுமையாகப் பாண்டியனுக்குப் பதில் சொன்னார் மணவாளன்.



நம் நாட்டிலும் வெளிநாடுகளிலும் ராஜாஜி மறைவுக்கு அனுதாபக் கூட்டங்கள் பல நடந்திருக்கின்றன. சென்னை ஷெரீப் திரு புகாரி கூட்டிய அனுதாபக் கூட்டத்துக்குத் தமிழக ஆளுநர் தலைமை வகித்தார். பிரதம நீதிபதி வீராசாமி, தவத்திரு ஜெரோம் டிசௌஸா, ஸ்தாபன காங்கிரஸ் தலைவர் திரு ராமச்சந்திரன், திரு ம.பொ.சி. திருமதி [illegible], முதல்வர் திரு மு. கருணாநிதி முதலியோர் பேசினர்.

சாகித்திய அகாடெமியின் சார்பில் சென்னையில் 13ந் தேதி திரு கே. சந்திரசேகரன் அவர்கள் தலைமையில் தமிழ், தெலுங்கு, மலையாள மொழி இலக்கிய விற்பன்னர்கள் ராஜாஜியின் அரும் பணிகளை நினைவு கூர்ந்து ஓர் அனுதாபத் தீர்மானம் நிறைவேற்றினர். மேலே படத்தில் தலைமை வகித்த கே. சந்திரசேகரனையும், பெரிய நீதிபதி எஸ். மகராஜன் அவர்களையும், திரு ரோ முகவையும் காணலாம்.



நாலைந்து நாட்கள் மல்லிகைப்பந்தலில் தங்கியிருந்த பின் மறுபடி பட்டமளிப்பு விழாவுக்கு முன்னர் வருவதாகக் கூறி விட்டு மதுரைக்குப் புறப்பட்டுச் சென்றார் மணவாளன். அவர் திரும்புவதற்குள் பலமுறை கதிரேசனைச் சந்திக்க முயன்றும் முடியவில்லை. அவன் அவர் பார்வையில் சிக்கவேயில்லை. அவர் ஊருக்குப் போன மறுநாள் பகலில் பல்கலைக் கழகக் காண்டீனில் தேநீர் அருந்துவதற்காகப் பாண்டியனும் கண்ணுக்கினியாளும் நுழைந்தபோது, உள்ளே யிருந்து கதிரேசன் நாலைந்து மாணவர்களோடு தேநீர் அருந்திவிட்டு எதிரே திரும்பி வந்து கொண்டிருந்தான். குறுகிய வாயிலருகே ஒருவரை யொருவர் தவிர்க்க முடியாமல் பாண்டியனும், கதிரேசனும் சந்தித்துக் கொள்ள நேர்ந்து விட்டது. ''ஹலோ கதிரேசன்!'' என்று பாண்டியன் எதிரே வழி மறித்ததும் கதிரேசன் நின்றான். ''என்னப்பா உன்னைக் காணவே முடியறதில்லே! மணவாளன் அண்ணன் வந்து நாலைந்து நாள் தங்கி யிருந்தாரு. உன்னைப் பார்க்கணும்னு தவியாய்த் தவிச்சாரு. முடியலே...''—என்று பாண்டியன் தொடங்கியதும், ''நான் நிலக்கோட்டைக்குப் போயிருந்தேன்'' என்றான் கதிரேசன். முக மலர்ச்சியே இல்லாமல் மணவாளனைப் பற்றி ஒரு வார்த்தைகூட விசாரிக்காமல் அவன் அசட்டையாகப் பதில் கூறிய விதம் பாண்டியனுக்கு என்னவோ போலிருந்தது.

அந்தக் கடுமையைத் தவிர்க்க விரும்பி, ''நான்கூட 'சாரை'ப் பார்த்து ரொம்ப நாளாச்சு'' என்று கண்ணுக்கினியாள் சிரித்துக் கொண்டே தொடங்கியதும், ''நான் இப்பல்லாம் யாரையுமே பார்க்க விரும்பறதில்லே'' என்று கத்தரித்தாற் போல் பதில் சொல்லி விட்டு உடனிருந்தவர்களோடு மேலே நடந்து விட்டான் கதிரேசன். பாண்டியனுக்கும், கண்ணுக்கினியாளுக்கும் அந்தப் பதில் முகத்தில் அறைந்தாற் போல் ஆகிவிட்டது.

''ரொம்ப மாறி விட்டான்'' என்று கண்ணுக்கினியாளிடம் கூறினான் பாண்டியன்.

''மாற்றம் அப்படி இப்படி இல்லே. அபாயகரமான அளவு மாறியிருக்கிறார். நான் இன்னும் என்னென்னவோ கேள்விப்படுகிறேன்'' என்றாள் அவள். கதி



**செல்வ**

**விநாயகர்**

**திருப்பணி**

மேல மாம்பலம் கோதண்டராமஸ்வாமி கோயில் தெருவில் குடிகொண்டுள்ள செல்வ விநாயகர் அப்பேட்டைவாசிகளின் அபிமான தெய்வமாக அருள் புரிந்து வருபவர். இக்கோயிலைப் புதுது பார்க்கவும் ஆகம விதிப்படி விமானங்கள் எழுப்பவும் ஒரு குழு அமைக்கப்பட்டிருக்கிறது. இத்திருப் பணியில் பங்கு கொள்ள விரும்புவோர் பொருள் அனுப்ப வேண்டிய முகவரி: ஸ்ரீ ஆர். துளசிதாஸ், காரியதரிசி, செல்வ விநாயகர் ஆலயக் குழு, 84, கோதண்ட ராமஸ்வாமி கோயில் தெரு, மேல மாம்பலம், சென்னை - 33

ரேசன் நடந்து கொண்ட விதம் அவர்களுக்குக் கவலை அளித்தது.

''லேக் அவென்யூவில் ராயல் பேக்கரி பில்டிங்கில் 'குமரப்பன்'னு ஒரு ஆர்ட்டிஸ்ட் இருக்காரு. அவர்தான் உன்னூரில் கதிரேசனுக்குக் குரு'' என்றாள் கண்ணுக்கினியாள்.

''உனக்கெப்படித் தெரியும் அது?''

''எங்க விமன்ஸ் ஹாஸ்டல்லே இருந்து கூட ஒரு மலையாளிப் பெண் அவங்க செல் மீட்டிங்குகளுக்குப் போக வர இருக்கா... வார்டன் அம்மாள் அவளைப் பற்றி ரொம்பவும் பயப்படுகிறாள்.''

''அந்தக் குமரப்பன் பெரிய ஜீனியஸ்! அவரைப் பற்றி நான் நிறையக் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனா அவர் இவ்வளவு தீவிரமானவர்னு இன்னிக்கு நீ சொல்லித்தான் தெரியும்...''

''அறிவாளிகள் ஒடுக்கப்பட ஒடுக்கப்பட அப்படி ஒடுக்கப்படும் அல்லது ஒதுக்கப்படும் சமூகத்தில் இப்படி யெல்லாம்தான் நடக்கும் போலிருக்கிறது.''

''ஒரேயடியா நீ அப்படிச் சொல்லி விட முடியாது. உன் வாதம் தவறானது. அறிவாளிகளிலும் நம் பூதலிங்கம் சார் இருக்கிறார். அவர் இன்னும் சமூக நியாயங்களுக்காகப் போராடுகிற குண முடையவர்தான். ஆனால் போராடும் மார்க்கத்தையும் நியாயமானதாக எதிர்பார்க்கிறார். படிக்காதவர்களில் நம் அண்ணாச்சி இருக்கிறார். அவரும் சமூக நியாயங்களுக்காகப் போராடுகிற குணம் உடையவர்தான். ஆனால் போராட்ட மார்க்கத்தையும் நியாயமானதாகத் தான் எதிர்பார்த்துப் போராடுகிறவர். இளைஞர்களில் நம் மணவாளன் அண்ணன் இருக்கிறார். அவரும் இலட்சியத்தை அடையத் துடிப்பதோடு அடையும் மார்க்கத்திலும் ஒரு நியாயத்தை எதிர்பார்க்கிறார்.''

'' இந்தக் குமரப்பனை ரொம்ப நாளைக்கு முன்னே — இந்த ஊர்லே யூனிவர்ஸிடி வர்றதுக்கு முந்தி இங்கே காலேஜில் தமிழ் லெக்சரராக இருந்த சத்தியமூர்த்திங்கிற அவரோட சிநேகிதருடன்தான் இங்கே வந்தாராம். அப்ப இவர் அவ்வளவு தீவிரம் இல்லியாமே?''

''காலங்களுக்கும் சித்தாந்த மாறுதல்களுக்கும் நிறையத் தொடர்பிருக்கிறது. பழம் கனிவதற்கும் அழுகுவதற்கும், வற்றுவதற்கும் காலமே காரணம். அளவோடு நின்றால் கனிவு. அளவு மீறினால் அழிவு. அழிவும் எல்லை மீறினால் வற்றுதல் என்று பல நிலைகள் இருக்கும்போது யார்தான் அந்த நிலைகளிலிருந்து தப்ப முடியும்?''

''அதாவது பழம் கனிவதற்குத் தேவையான காலம் கடந்து மேலும் விடப்படுகிற காலம் அழுகவும் அதற்கு மேலும் விடப்படுகிற காலம் வற்றவும் செய்யும் என்கிறீர்கள் இல்லையா?''

''ஆம்! வற்றிய கனியில் மீண்டும் கனிவைக் கொண்டு வர முடியுமா?''

''கதிரேசன் மாற மாட்டான் என்கிறீர்கள், இல்லையா?''

''அவன் ரொம்ப அவசரப்படுகிறான். இன்னும் அவன் மேலுள்ள அன்பையும் பிரியத்தையும் விட முடியாமல் நான் தவிக்கிறேன். அவனோ எல்லா அன்பையும், எல்லாப் பிரியத்தையும் வற்றச் செய்து கொண்டு விட்டான்...''

'' எங்கே அன்பு வற்றுகிறதோ, அங்கே வெறுப்பும் விரக்தியும் உடன் நிகழ்ச்சியாக உற்பத்தியாகின்றன. வெறுப்பில் அழிவுகள் பெருக்கின்றன. அழிவுகளால் எதைத்தான் வளர்க்க முடியும்?'' — அவள் கேட்டாள்.

''நீ நினைப்பது போல் எதையும் செய்ய முடியாதவன் என்று அவனைப் பற்றியோ அவன் சார்பைப் பற்றியோ நான் நினைக்கவில்லை. அவன் இனி எதைச் செய்ய முடியுமோ அதைப் பற்றியே நான் கவலைப்படுகிறேன்.''

''அந்தக் கவலை அவருக்கு இல்லையே என்ன செய்யலாம்?''

இப்படிப் பாண்டியனும் கண்ணுக்கினியாளும் கவலைப்பட்டுப் பயப்பட்டதும், பதறியதும் எதற்காகவோ அது அடுத்த நாலைந்து தினங்களிலேயே அங்கே நடந்து விட்டது. (தொடரும்)













சூப்பர் பட்டர்ஸ்காட்ச்

ஒவ்வொரு சூப்பர் பட்டர்ஸ்காட்சும் வெண்ணை சுவை கொண்டது. (ஆரம்ப முதல் இதே தரத்தை நிலை நிறுத்தி வருகிறது — 60 வருடங்களாக — சிவப்பும் தங்க நிறமும் கொண்ட உறைகளில் சுற்றப்பட்டவை)

# இன்னும் ஒன்று – அதுவே இன்பம்.

PR3-4547 TM

பாரீஸ் கன்பெக்ஷனரி லிமிடெட், சென்னை-1.



அமெரிக்கக் கதை

# குட்டி மனைவி

## வில்லியம் மார்ச்

ரயிலில் நிழல் விழக்கூடிய பக்கத்தில் ஓர் ஆசனத்தைத் தேர்ந்தெடுத்தான் ஜோ ஹின்க்லே. பிரயாணப் பையையும் தன் உத்தியோகம் சம்பந்தப்பட்ட தாள்கள் அடங்கிய கரிய, கனமான பெட்டியையும் ஜாக்கிரதையாக அவற்றுக்குரிய இடத்தில் வைத்தான். ஜூன் ஆரம்பம்தான் என்றாலும் வழக்கத்தைவிட உஷ்ணமாகவே இருந்தது. வெளியே உஷ்ண அலைகள் சூடேறியிருந்த ரயில் பாதை மேலாக நர்த்தனமாடிப் பளபளத்தன. ரயில் நிலையத்துக்கு அருகில் ஓடிய வண்டல் ஆற்றின் சிவந்த கரைகளுக்கு இடையில் நீர் மட்டம் மிகத் தாழ்வாக இருந்தது. 'ஜூன் மாதத்திலேயே இத்தனை உஷ்ணமென்றால் ஆகஸ்டில் சகிக்கவே முடியாது' என்று நினைத்தான். மணியைப் பார்த்தான். 2.28. ரயில் ஐந்து நிமிஷம் தாமதமாகப் புறப்பட்டிருந்தது. 2.23 ரயில் ஐம்பத் தாமதமாகும் என்பது தெரிந்திருந்தால் கம்பெனி தயாரிப்புக்களின் மாதிரிகளை வைக்கும் பெட்டியில் அடைக்க வேண்டியவற்றையெல்லாம் அடைத்து, அதையும் ஸ்டேஷனுக்குக் கொண்டு வந்திருக்கலாம். ஆனால் ரயில் தாமதப்படும் என்று அவன் எதிர்பார்க்கவில்லையே. மிஸஸ் தாம்ப்கின்ஸின் தந்தி கிடைத்த பிறகு ரயிலைப் பிடிக்கச் சிறிதளவு நேரமே இருந்தது. பையை உடைகளால் நிரப்பிக் கொண்டு ஹோட்டல் கணக்கைத் தீர்த்துவிட்டுப் புறப்படத்தான் நேரம் இருந்தது. ஜோ இடுப்புப் பெல்ட்டைத் தளர்த்தி விட்டுக் கொண்டான். கசங்கித் தோய்ந்த கைக்குட்டையால் கழுத்தை ஒற்றிக் கொண்டான். ' 'சாம்பிள்' பெட்டியைப் பற்றி அதிகமாகக் கவலைப்பட வேண்டியதில்லை. ஹோட்டல் பணியாள் யாராவது அதை எனக்கு எக்ஸ்பிரஸ் ரயிலில் அனுப்பி விடுவார்கள். அல்லது திரும்பி இந்தப் பக்கமாக வரும்போது நாமே எடுத்துக் கொண்டாலும் ஆயிற்று.'

தந்தி ஜோவை நிலைகுலையச் செய்துவிட்டது. திடும்மென்று சற்றும் எதிர்பாராத வேளையில் அது கிடைத்தது. யாரோ தன்னிடம் தமாஷ் பண்ணுகிறார்களோ என்று அவன் இப்போதுகூட நினைத்தான். குழப்பமடைந்து உதவிக்குத் தனக்கு யாருமே இல்லாதது போல் தவித்தான். பெஸ்ஸி நோய் வாய்ப்பட்டு ரொம்ப ஆபத்தான நிலையில் இருக்கிறாள் என்பதை நம்புவதே கடினமாக இருந்தது. தன் விரல் நகங்களைப் பார்த்தபடி சற்று நேரம் மௌனமாக இருந்தான்.

அவனுக்கு முன்னால் இரு இளம் பெண்கள் ஜன்னல் வழியே எட்டிப் பார்த்து நண்பர்களிடம் கரமசைத்து விடைபெற்றுக்கொண்டிருந்தார்கள். அவர்கள் கண்கள் பளபளத்தன. கன்னங்களில் செம்மை படர்ந்திருந்தது. வெளியூர் செல்கிறோம் என்ற எண்ணம் ஏற்படுத்திய பரபரப்புடன் அவர்கள் சிரித்துக் கொண்டிருந்தார்கள்.



ரயில் பெட்டிக்குள் ரொம்ப உஷ்ணமாக இருந்தது. ஒரு மூலையிலிருந்த மின் விசிறி தூக்கத்தில் குறட்டை விடுவது போல் ஒலி எழுப்பிக் கொண்டிருந்தது. உஷ்ணமான காற்றைக் கிளறி விடுவதில்தான் அது வெற்றி பெற்றது.

ஜோ தன் ஜேபியிலிருந்து மாமியாரிடமிருந்து வந்திருந்த தந்தியை எடுத்து மறுபடியும் படித்தான்: ''உடனே வீடு திரும்பவும். பெஸ்ஸி இன்று முழுவதும் உயிர் வாழ்வதே சந்தேகம் என்று டாக்டர் கூறுகிறார். அவசியமானால் மறுபடியும் தந்தி கொடுக்கிறேன். ஆண் குழந்தை பிறந்தது — அம்மா.''

ஜோவின் கரங்கள் சட்டென்று இறுகி முஷ்டியாயின. பின்னர் தளர்ந்தன. எல்லாம் திடீரென்று நடந்து விட்டது. இப்போதுகூட அவனால் இதையெல்லாம் மூளையில் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. வாடிக்கையாளர் ஒருவரை அன்று அவன் பகலுணவுக்கு அழைத்துப் போய் உபசரித்தான். அவர்கள் பேசிச் சிரித்தார்கள். ஒருவருக்கொருவர் வேடிக்கைக் கதைகள் கூறிக் கொண்டார்கள். இரண்டு மணிக்குத் தன் ஹோட்டலுக்குத் திரும்பினான் ஜோ, முகம் கழுவித் தன் தோற்றத்தைச் சற்றுப் புதுப்பித்துக் கொள்ள. அப்போது ஹோட்டல் குமாஸ்தா அவன் அறைச் சாவி வைக்கப்பட்டிருந்த பொந்திலிருந்து தந்தியையும் வெளியே எடுத்தான். இரண்டு மணி நேரமாகத் தந்தி காத்திருப்பதாகச் சொல்லிக் கொடுத்தான். ஜோ அதை இரண்டு தடவை படித்தான். பிறகு விலாசத்தை நோக்கினான், தனக்குத்தான் தந்தி வந்திருக்கிறதா என்று உறுதிப்படுத்திக் கொள்ள விரும்பியவனாக. அவனுக்குப் புரியவில்லைதான். பெஸ்ஸி நன்றாகத்தானே இருந்தாள்! ஒரு தொந்தரவும் இல்லை. குழநதை பிறப்பதற்கு இன்னும் ஒரு மாத காலம் பாக்கி இருந்தது. குழந்தை பிறக்கும்போது அவனுடன் இருக்க வேண்டும் என்பதற்காக அவன் தன் பயணத் திட்டத்தையெல்லாம் ஒழுங்கு படுத்தி யிருந்தான். இருவருமாக இதையெல்லாம் யோசித்துப் பார்த்துச் சகலத்தையும் கச்சிதப்படுத்தி யிருந்தார்கள்.



ஆனால் இப்போது எல்லாமே குலைந்து விட்டது. அவன் நினைத்தான்: ''நான் அந்த வாடிக்கையாளரிடம் சிரித்துப் பேசிக்கொண்டிருந்த நேரம் முழுவதும் தந்தி எனக்காகக் காத்துக் கொண்டிருந்தது.' அந்த எண்ணம் அவனுக்கு வேதனை அளித்தது. அவன் திரும்பத் திரும்ப, தனக்குத் தானே ஒரு முட்டாளைப் போல் பேசிக் கொண்டான்: ''நான் சிரித்துக் கொண்டும் ஆபாசக் கதைகளைக் கூறிக்கொண்டும் இருந்த நேரம் முழுவதும் ஹோட்டலில் தந்தி எனக்காகக் காத்திருந்தது.''

ஜோ சாய்ந்து, தலையைத் தன் ஆசனத்தில், வெல்வெட் போன்று புசுபுசுவென்றிருக்கும் சிவப்புத் துணி மீது பதித்துக்கொண்டான். 'அம்மா' என்று தந்தியை அனுப்பியவர் பெயர் குறிப்பிட்டிருந்ததானது அவனுக்குப் புதிராக இருந்தது. தன் தாயார் மொபைலில் பெஸ்ஸியோடு என்ன செய்து கொண்டிருக்கிறாள் என்பது அவனுக்குப் புரியவில்லை. பிறகு தான் அவன் பெஸ்ஸியின் அம்மா இதை அனுப்பியிருக்கிறாள் என்று உணர்ந்தான். பெஸ்ஸியின் தாயாரை மிஸஸ் தாம்ப்கின்ஸ் என்ற பெயரால் தவிர வேறு விதமாக எண்ணிப் பார்த்ததே யில்லை அவன்.

பெஸ்ஸியை அவன் மணந்துகொண்ட போது அவன் தாயார் ஏதோ இயல்பான ஒரு காரியத்தைச் செய்வது போல் அவர்களுடன் வாழ வந்தாள். ஒரு விதத்தில் அவனுக்கு இது மகிழ்ச்சி அளித்தது. நெருக்கம் என்று ஏற்படவில்லையே யொழிய உண்மையில் அவனுக்கு அந்த வயதான அம்மாளைப் பிடித்துத் தான் இருந்தது. மேலும் இவன் அடிக்கடி வெளியூர் போக வேண்டி யிருந்ததால் பெஸ்ஸிக்குப் பின்னேடு யாராவது இருப்பது மகிழ்ச்சி அளிப்பதாகத்தான் இருக்கும். அவன் உத்தியோகம் அத்தகையதாக இருந்தபடியால், இரண்டு வாரங்களுக்கு ஒரு முறை சனி, ஞாயிறுகளில்தான் அவன் வீட்டுக்குப் போக முடியும். இதுவே கஷ்டமாகத்தான் இருந்தது. ஆனால் அவன் மிகுந்த பிரயாசைப்பட்டு இந்த நியமத்தை விடாமல் கடைப்பிடித்து வந்தான். என்னவானாலும் சரி, பெஸ்ஸிக்கு அவனால் ஏமாற்றமளிக்க முடியாது. கல்யாணமான பின் இந்த ஓராண்டுக்காலம் அவன் வாழ்விலேயே மிக மிக மகிழ்ச்சிகரமானதாக விளங்கியது. பெஸ்ஸியும் சந்தோஷமாக இருந்தாள். திடீரென்று அவனுக்கு ஒரு காட்சி தெளிவாகத் தெரிந்தது. தங்கள் கட்டிலில் அவள் வேதனையுடன் முகம் வெளிறிப் போகப் படுத்திருக்கிறாள்! பீதி அவன் இதயத்தை வேகமாகக் கவ்வியது. தனக்குத் தானே நம்பிக்கை யூட்டிக்கொள்ள அவன் ரகசியக் குரலில் பேசினான்: ''டாக்டர்களுக்குச் சகலமும் தெரியும் என்று சொல்ல முடியாது. அவளுக்கு எல்லாம் சரியாகப் போய்விடும். மிஸஸ் தாம்ப்கின்ஸ் பரபரப்படைந்து பயந்து விட்டிருக்கிறாள். எல்லாம் சரியாகிவிடும்.''

நீக்ரோவான ரயில் போர்ட்டர்* நடைபாதையில் வந்தார். தம் கையில் ஒரு தந்தி வைத்திருந்தார். ரயில் பெட்டியின் மையத்தை அடைந்ததும் அவர் நின்று கூவினார்: ''மிஸ்டர் ஜே. ஜி. ஹின்க்லேக்குத் தந்தி!'' ஜோ, மூன்று முறை அவர் தன் பெயரைக் கூவி அழைத்த பிறகுதான் தந்தியை வாங்கிக் கொண்டான். ரயில் நகர ஆரம்பித்த சமயத்தில் அமெரிக்கன் ஹோட்டலிலிருந்து ஒரு பணியாள் வந்து தந்தியைக் கொடுத்து விட்டுப் போனதாகப் போர்ட்டர் விளக்கினார். ஜோ அவருக்கு இருபத்தைந்து சென்ட் இனும் கொடுத்துவிட்டுத் தன் ஆசனத்துக்குத் திரும்பிச் சென்றான்.

அவனுக்கு முன்னாலிருந்த இளம் பெண்கள் இருவரும் அடக்க மாட்டாமல் அசட்டுத்தனமாகச் சிரித்தார்கள். ஒருவரோடொருவர் ரகசியமாகப் பேசிக் கொண்டு ஜோவைத் துணிவுடன் நிமிர்ந்து பார்த்தார்கள்.

ஜோவுக்குத் தொண்டையை அடைத்தது. தன் கரங்கள் நடுங்குவதை அவன் கவனித்தான். ஜன்னல் விளிம்பில் தன் தலையைச் சாய்க்க அவன் விரும்பினான். ஆனால் சக பயணிகள் தனக்கு உடம்பு சரியில்லை என்று கருதிப் பேச வந்து விடுவார்கள் என்று பயந்தான். தனக்குப் பக்கத்தி லிருந்த ஆசனத்தில் பிரிக்கப்படாத தந்தியை அவன் வைத்தான். அதை நீண்ட நேரம் உற்றுப் பார்த்தான். கடைசியில் முதல் தந்தியை நிதானமாக மீண்டும் படித்தான். 'ஆமாம். மிஸஸ் தாம்ப்கின்ஸிடமிருந்துதான் இதுவும் வந்திருக்க வேண்டும். அவசியம் நேர்ந்தால் மறுபடியும் தந்தி கொடுக்கிறேன் என்று கூறியிருக்கிறாளே...' பிறகு அவன் எண்ணினான்: 'இது மிஸஸ் தாம்ப்கின்ஸிடமிருந்தே வந்திருக்காது; வேறு யாராவது அனுப்பியிருப்பார்கள். என் ஆபீஸிலிருந்து மெரிடியனில் விற்பனை ரத்தானது பற்றித் தந்தி வந்திருக்கும். ஆமாம், அங்கிருந்துதான்; ஆபீஸிலிருந்துதான். மிஸஸ் தாம்ப்கின்ஸிடமிருந்து இது வரவேயில்லை.' அவன் விருட்டென்று நிமிர்ந்தான். அந்த இரு இளம் பெண்களும் திரும்பித் தன்னைக் கவனித்துக் கொண்டிருப்பதைப் பார்த்தான். தங்கள் கரங்களுக்குப் பின்னால் அவர்கள் சிரிப்பை மறைத்துக் கொண்டு அவனைப்பற்றி ஒருவருக்கொருவர் ஏதோ கூறிக்கொண்டனர்.

அவன் தன் ஆசனத்தை விட்டு எழுந்தான். பலவீனமும் இலேசான வயிற்றுக் குமட்டலும் இருந்தன. பிரிக்கப்படாத தந்தியைக் கையில் எடுத்துக் கொண்டு பல ரயில் பெட்டிகளைக் கடந்து ரயிலின் கடைசிப் பகுதிக்கு வந்து சேர்ந்தான்.† அங்கிருந்தபடியே வெளியில் குதித்துக் காட்டுக்குள் ஓடிப் போய் விடவேண்டும் என்று ஓர் ஆசை திடீரென்று எழுந்தது. ஆனால் அங்கே பிரேக் பரிசோதகர் ஒருவர் சிவப்பு லாந்தரில் ஏதோ சரிபார்த்துக்கொண்டிருந்தார். தான் எண்ணியவாறு நடந்து கொண்டால் அது ரொம்ப விநோதமாக இருக்கும் என்று உணர்ந்தான். பிரேக்

* பிரயாணிகளுக்கு உதவுவதற்காக ஓரிரு போர்ட்டர்கள் ரயிலிலேயே பிரயாணம் செய்வதுண்டு. அமெரிக்காவில், ரயில் நிறுவனத்தின் ஊழியர்கள்.

† நமது டீலக்ஸ் பஸ்களில் உள்ளது போல் அமெரிக்க ரயில்களில் இரு புறமும் ஆசனங்களும் நடுவில் நடைபாதையும் இருக்கும். ரயிலின் ஒரு முனையிலிருந்து மறு முனை வரை ரயிலுக்குள்ளேயே நடந்து செல்லலாம்.

# 12 வயதான சென்னை சுந்தர் கூறுகிறான்...

"நான் பத்து ரூபாய் மட்டும் போட்டு 'கிட்டி பாங்க்' கணக்கை ஆரம்பித்தபோது, ஆந்திரா பாங்கில் எனக்கு ஒரு 'கிட்டி பொம்மை' தந்தார்கள்.

"என் கைச் செலவிற்காக கொடுக்கப்பட்ட பணத்திலிருந்து கொஞ்சம் அதில் போடுவேன் — தினமும். அது நிரம்பியவுடன் ஆந்திரா பாங்க் அப் பணத்தை என் கணக்கில் போட்டு விடுவார்கள். அது மட்டுமா? என் பணத்திற்கு வட்டியும் கொடுத்தார்கள்.

"பணம் சேமிப்பதென்றாலே தனி குஷிதான். என்னைப் போலவே 60,000 சிறுவர், சிறுமியரும் ஆந்திரா பாங்கில் 'கிட்டி பாங்க்' கணக்குதுவக்கியுள்ளார்கள்.

*"நீங்களும் ஏன் ஒன்று துவக்கக் கூடாது?* உங்கள் தந்தையிடம் சொல்லிவிட்டு, அருகாமையிலுள்ள ஆந்திரா பாங்கின் கிளைக்கு இன்றே செல்லுங்கள்."

என் சொந்த

## 'கிட்டி பாங்க்'

கணக்கில்
நான் ரூ. 739.50
வைத்திருக்கிறேன்.








**தி ஆந்திரா பாங்க் லிமிடெட்**

*மத்திய அலுவலகம்:*
சுல்தான் பஜார்,
ஹைதராபாத்

கே. கோபால் ராவ்
சேர்மன்

எம். வி. சுப்பாராவ்
ஜெனரல் மானேஜர்

நாட்டுப்பணிக்குத் தொண்டாற்றும்
நாட்டுடமையாகாத ஒரு பாங்க்

FDS/AB-1827 THA

பரிசோதகர் நிமிர்ந்து ஜோவின் முகத்தைப் பார்த்ததும் லாந்தரைக் கீழே வைத்து விட்டுக் கேட்டார்: ''நீங்கள் சரியாகத்தான் இருக்கிறீர்களா?'' ஜோ சொன்னான்: ''ஓ, நான் சரியாகத்தான் இருக்கிறேன். ஆனால் உஷ்ணம்தான் கொஞ்சம் அதிகமாக இருக்கிறது.'' ஒருவாறு பிரேக் பரிசோதகர் தம் வேலை முடிந்து நகர்ந்தார். அதனால் ஜோ மகிழ்ச்சி அடைந்தான். அவன் தனித்திருக்க ஆசைப்பட்டான். தன்னைச் சுற்றி யாரும் இருப்பதை அவன் விரும்பவில்லை. தண்டவாளங்கள் கட கட வென்று சப்தித்தன. ரயில் உஷ்ணமான பாதை மீதாகப் பறந்தது.

தன் கையிலிருந்த தந்தியை அவன் புரட்டிப் புரட்டிப் பார்த்துச் சிந்தித்துக் கொண்டிருந்தான். 'இப்போது இதைப் பிரித்து விட வேண்டியதுதான். பிரித்துப் படித்துத் தான் ஆக வேண்டும்.' கடைசியில் உரக்கவே பேசினான்: ''இது உண்மையல்ல; நான் நம்பவில்லை.'' இதைத் திரும்பத் திரும்பப் பல முறை கூறிவிட்டுத் தொடர்ந்தான்: ''இது கம்பெனியிலிருந்துதான் வந்திருக்கிறது. மெரிடியனில் விற்பனை ரத்தானது பற்றித்தான். மிஸஸ் தாம்ப்ஸின்னிடமிருந்து இது வரவேயில்லை.'' பிரிக்கப்படாத தந்தியை அவன் சுக்குச் சுக்காகக் கிழித்தான். ரயிலின் இறுதி முனையிலிருந்து அவற்றை வீசி எறிந்தான். காற்று அவற்றைப் படபடக்கவும் பளபளக்கவும் வைத்தது. பின்னர் அவை மெல்ல மெல்ல, கடினமான, உஷ்ணமான ரயில் பாதை மீது இலேசாக இறங்கின. 'ஒரு மேகக் குவியலாக மஞ்சள் நிறப் பட்டுப் பூச்சிகள் நடனமாடிக் கொண்டே வந்து இறங்குவது போல் தோன்றுகின்றன இவை' என்று நினைத்தான். உடனே அவன் சற்று சௌகர்யமடைந்தாற் போல் உணர்ந்தான். தன் தோள்களைப் பின்னுக்குத் தள்ளி நுரையீரல்களில் கிராமப்புறக் காற்றை நிரப்பினான். ''எல்லாம் சரியாகி விட்டது'' என்று கூறினான்.

''நான் என் குட்டி மனைவியைப் பார்க்க வீட்டுக்குப் போகிறேன். எல்லாம் சரியாகவே இருக்கிறது.'' அவன் சந்தோஷமாகச் சிரித்தான். ஏதோ பயங்கர விபரீதத்திலிருந்து தப்பியது போல் உணர்ந்தான். காகிதத் துகள்களை இனிக் காண முடியாது என்ற நிலையில் அவன் தன் ஆசனத்துக்குத் திரும்பிப் போனான், ஒரு பாட்டை வாய் திறவாமல் இசைத்துக் கொண்டே. பெரிய சுமையை இறக்கி விட்டவனாக மகிழ்ந்தான்.

ஜோ தன் ஆசனத்தில் அமர்ந்ததும் கண்டக்டர் ரயிலினூடே நடந்து வந்தார். ஜோ தன் டிக்கட்டைக் கொடுத்துவிட்டு இனிமை ததும்பத் தலையை ஆட்டினான். ''யாராவது உங்களிடம் நைஸாகப் பேசி, ஓசிப் பயணத்துக்கு அடி போடப் போகிறார்கள்; அதற்கெல்லாம் மசிந்து போகாதீர்கள்!'' என்றான்.

''நம்மிடம் நடக்காது!'' என்றார் கண்டக்டர்.

ஜோ மனப்பூர்வமாகச் சிரித்தான். கண்டக்டர் அவனை அதிசயத்துடன் பார்த்தார். பிறகு தாமே சிறிது சிரித்தார். ''வெய்யில் வறுத்தெடுத்தாலும் நீ உற்சாகமாகத்தான் இருக்கிறாய்'' என்றார்.

''நான் ஏன் உற்சாகமாக இருக்கக் கூடாது?'' என்று ஜோ கேட்டான். ''நான் என் குட்டி மனைவியைப் பார்க்கப் போகிறேனே!'' பிறகு ஏதோ பரம ரகசியத்தை வெளியிடுபவன் போல், ''ஆண் குழந்தை'' என்றான்.

''பேஷ்! பலே பேஷ்!'' என்றார் கண்டக்டர். காகிதங்கள், டிக்கெட்டுகள் முதலானவற்றை ஓர் ஆசனத்தில் வைத்துவிட்டு ஜோவின் கைகளைப் பற்றிக் குலுக்கினார். ஜோ வெட்கத்தினால் முகம் சிவக்க, மறுபடியும் சிரித்தான். கண்டக்டர் நகர்ந்து செல்லு முன்னர் ஜோவை விலாப்புறத்தில் நிமிண்டினார். ''உங்கள் மனைவிக்கு என் வணக்கங்களைத் தெரியப்படுத்துங்கள்!'' என்றார்.

''கண்டிப்பாக'' என்றான் ஜோ.

கண்டக்டர் இன்னும் சற்று நேரம் இல்லாமல் போய்விட்டாரே என்று வருத்தமாக இருந்தது ஜோவுக்கு. தான் யாரிடமாவது கண்டிப்பாகப் பேசியாக வேண்டும் என்று அவனுக்குத் தோன்றியது. பெஸ்ஸியைப் பற்றி யாரிடமாவது பேசியாக வேண்டும்! ரயில் பெட்டியில் தனக்குத் தெரிந்தவர்கள் யாராவது இருக்கிறார்களா என்று சுற்றிலும் பார்த்தான். அந்த இரு இளம் பெண்களும் அவனை நோக்கிப் புன்னகை செய்தார்கள். ஜோவுக்கு அவர்களை நன்றாகப் புரிந்து கொள்ள முடிந்தது. இருவரும் மிக நல்ல பெண்கள். ஊருக்குப் போகிறார்கள். தனியாக வந்திருந்தால் இருவரில் ஒருவர்கூட முன் பின் தெரியாத ஒருவனை நோக்கிப் புன்னகை புரிய நினைத்தே இருக்க மாட்டார்கள். ஆனால் இருவர் சேர்ந்திருக்கும்போது எல்லாம் தலைகீழாகி விடும். இது அவர்களுக்குப் பரபரப்பூட்டும் ஒரு சாகஸச் செயல். பின்னால் தங்கள் நண்பர்களிடம் கூறி விவாதித்துச் சிரிக்க வேண்டிய விஷயம். ஜோ அவர்களுக்கருகே சென்று பேசுவதென்று தீர்மானித்தான். சர்வ சாதாரணமாக அங்கு நடந்து போய் உட்கார்ந்தான்.

''இளம் சீமாட்டிகள் எங்கே கிளம்பினீர்கள் போலேயோ?'' என்றான்.

கரிய விழிகளுடைய பெண் ''உனக்கு அசாத்தியத் துணிச்சல் இருப்பதாக நினைப்பா?'' என்றாள்.

''ஆமாம். எனக்கு உண்டுதான். அசாத்தியத் துணிச்சல் இல்லாதபோனால் நான் எப்படி மிகச் சிறந்த ஒரு விற்பனையாளனாக விளங்க முடியும்?'' என்று ஜோ இனிமையாகக் கேட்டான்.

இரு பெண்களும் சிரித்தார்கள். ஜோ இனி கவலையின்றிப் பேச்சைத் தொடரலாம் என நினைத்தான். இருவரில் நீல நிற விழிகள் உடையவள்தான் அழகி. ஆனால் கருமையான விழிகள் கொண்டவள்தான் துருதுருப்பானவள் என்று தீர்மானித்தான்.

''நாங்கள் கிப்ளோமேடானில் இறங்குகிறோம்'' என்றாள் நீல விழியாள்.

கரு விழியாள், ''நாங்கள் மாண்ட்கோமரி பள்ளியில் படித்துக்கொண்டிருந்தோம்'' என்றாள்.

''கோடை விடுமுறைக்கு வீடு திரும்புகிறோம்.''

''அது குறித்து நாங்கள் சந்தோஷப்படுவது இந்த ஒன்றரைக் கண் உலகத்துக்குத் தெரிந்தாக வேண்டும்!''

ஜோ அவர்களை வருத்தத்தோடு பார்த்தான். ''பெண்களே, தவறு செய்யாதீர்கள்! இப்போதே எவ்வளவு முடியுமோ அவ்வளவு கல்வியும் பெற்றுவிட வேண்டும். பின்னால், 'அடடா! நாம் படிக்காமல் போய் விட்டோமே' என்று வருத்தப்பட இடம் வைத்துக்கொள்ளக் கூடாது.''

இரு பெண்களும் சிரிக்க ஆரம்பித்துவிட்டார்கள். ஒருவரை ஒருவர் கட்டிக்கொண்டு கண்ணில் நீர் ததும்பும்வரை சிரித்தார்கள். என்ன ஹாஸ்யத்தைக் கண்டு விட்டார்கள் என்று புரியாமலேயே ஜோவும் சிரித்தான். கொஞ்ச நேரம் கழித்து அவர்கள் சிரிப்பு அடங்கியது. ஆனால் திடீரென்று ஒருத்தி அடக்க மாட்டாமல் 'களுக்கு'ச் சிரிப்பு எழுப்ப, இருவருமாகச் சேர்ந்து மீண்டும் நகைக்க ஆரம்பித்து விட்டார்கள். நிலைமை முன்னை விட மோசமாகி விட்டது!

அவர்களைப் போலவே அதே அளவுக்குச் சிரித்தபடி ''என்ன ஹாஸ்யத்தைக் கண்டு விட்டீர்கள்?'' என்று ஜோ கேட்டான்.

நீல விழியாள் விளக்கினாள்: ''நீங்கள்.... ரொம்ப.... ரொம்ப....''

கருவிழியாள் முடித்தாள்: ''ஓர் அப்பாவைப் போல் உபதேசம் செய்தீர்கள்!''

அவர்கள் மறுபடியும் மகிழ்ச்சிச் சுழலில் சிக்கிக் கொண்டார்கள். ஒருவரை யொருவர் கட்டிக் கொண்டு சிரித்தார்கள்.

ஜோ அவர்கள் ஓய்ந்து போகும்வரை காத்திருந்தான். கடைசியில் அவர்கள் கண்களைத் துடைத்துக் கொண்டு டம்பப் பைகளைத் திறந்து தங்கள் தங்கள் முகத்தைக் கண்ணாடியில் பார்த்துக் கொண்டார்கள். பவுடர் ஒத்திக் கொண்டார்கள்.

அவன் கூறினான்: ''நான் ஒரு அப்பாவைப் போல்தான் பேச வேண்டும். இப்போதுதான் எனக்குத் தந்தி வந்தது. நான் முதல் தடவையாகத் தந்தையாகியிருக்கிறேன்.''

அந்த இரு பெண்களுக்கும் இச் செய்தி ரொம்ப சுவாரஸ்யமாக இருந்திருக்க வேண்டும். கேள்வி மேல் கேள்வி கேட்டுக் குடைந்தார்கள். எல்லா விவரங்களையும் தெரிந்து கொள்ள விரும்பினார்கள். ஜோ மிகவும் சந்தோஷம் அடைந்தான்.

அவன் தொடர்ந்து கூறினான்: ''சொல்வதற்கு நிறைய விஷயங்கள் இல்லை; மிஸஸ் தாம்ப்கின்ஸிடமிருந்து ஒரு தந்தி வந்தது. மிஸஸ் தாம்ப்கின்ஸ் என் மாமியார். 'பெஸ்ஸி ஓர் ஆண் மகவைப் பெற்றெடுத்திருக்கிறாள். தாயும் சேயும் சௌக்கியம்' என்று தந்தி கூறுகிறது. டாக்டர் இது போன்ற ஓர் ஆரோக்கியமான தாயையும் சேயையும் தாம் இதுவரை பார்த்ததே யில்லை என்று சொன்னாராம். இருந்தாலும் என் மனைவிக்கு நான் அருகில் இருக்க வேண்டும் என்று ஆசை. அதனால்தான் எல்லாவற்றையும் அப்படி அப்படியே விட்டு விட்டு நான் பயணப்பட்டுக் கொண்டிருக்கிறேன். பெஸ்ஸிக்கும் எனக்கும் கல்யாணமாகி ஒரு வருஷம்தான் ஆகிறது. நாங்கள் ரொம்ப சந்தோஷமாக இருந்து வந்திருக்கிறோம். ஒரே ஒரு கஷ்டம் என்னவென்றால் எனக்கு அடிக்கடி வீட்டுக்குப் போக முடியாது. ஆனால் உலகில் நாம் விரும்புவது போலவே எல்லாம் கச்சிதமாக நடந்து விடுகிறதா? பெஸ்ஸியை விடச் சிறந்த குட்டி மனைவி எவனொருவனுக்கும் வாய்க்கவே முடியாது. நான் நாள் கணக்கில் வெளியூர் போய்விடுவது பற்றி அவள் குறை சொல்வதே இல்லை. ஆனால் என்றாவது ஒரு நாள் இந்நிலையில் மாறுதல் ஏற்படும் என்று நம்புகிறோம்.''

''ஒரு குழந்தையைக் காட்டிலும் இனிமையான விஷயம் வேறெதுவுமில்லை'' என்றாள் நீல விழியாள்.

''அவனுக்கு என்ன பெயர் வைக்கப் போகிறீர்கள்?'' என்றாள் மற்றொருத்தி.

''அந்தப் பொறுப்பை நான் பெஸ்ஸிக்கே விட்டுவிடுவதாக இருக்கிறேன். எனக்கு அவள் மிக அருமையான குட்டி மனைவியாக இருந்திருக்கிறாள். அதனால் அவளுக்குப் பிடித்த

# கிரிக்கெட் கவியரங்கம்

முன்னுரை

சிறியவர் பெரியவர் என்றில்லாமல்
சேப்பாக் டெஸ்டை எதிர்பார்த்தார்
சில்லறை அதிகம் போனாலும்
'சீட்'டிற்காகப் பறந்தலைந்தார்.

முதல் நாள்

காம்பௌண்டுச் சுவர் இடிந்ததோ
காலை ஒருவன் மாண்டதோ



காமிராக்காரர் வெகுண்டதோ
காட்டாற்று ரசிகரைத் தடுக்கவில்லை.

'டாஸை'க் கெலித்தார் விருந்தாளி
தாக்கத் தொடங்கினர் நம்மவர்கள்
தாக்குப் பிடித்தவர் பிளெட்சர்தான்
தனிக்க வைத்தவர் சந்திராதான்.

இரண்டாம் நாள்

காணோம் காணோம் விறுவிறுப்பை
கல்லாய்ச் சிலையாய் நம்மவர்கள்
காலத்தைக் கடத்தி நின்றார்கள்
கணக்கில் ஓட்டம் கூடவில்லை

மும்முறை பிழைத்தவர் துரானி
முனைந்து அடித்தவர் பட்டாடி
முட்டை போட்டவர் சௌஹான்
முணுமுணுத்தார்கள் பார்த்தவர்கள்.

மூன்றாம் நாள்

காட்டுக்கு ராமன் புறப்பட்டான்
கண்ணைக் கசக்கினான் லட்சுமணன்

மான எந்தப் பெயரையும் குழந்தைக்குச் சூட்டலாம்.''

ஜோ மளமளவென்று பேச ஆரம்பித்தான். முதன் முதலாகப் பெஸ்ஸியைத் தான் சந்தித்தது பற்றி விரிவாகச் சொன்னான். ஒரு சீட்டாட்டத்தின்போதுதான் அவள் முதன் முதலாக அறிமுகமானாள். அவளை அவனுக்கு உடனே பிடித்துப் போயிற்று. ''ஆட்டத்தில் கவனம் இருக்கட்டும்'' என்று நண்பர்கள் கிண்டல் செய்தார்கள். அவள் தன்னைத் தவறாகப் புரிந்துகொள்ளலாம் என்பதால் அவளை இனி நிமிர்ந்து பார்ப்பதில்லை என்று நிர்மானித்தான். ஆனால் அவளைப் பார்க்காமல் இருக்க அவனால் முடியவே யில்லை. ஒவ்வொரு முறையும் அவர்கள் கண்கள் சந்தித்ததும் அவள் இனிமையான நட்புறவுடன் புன்னகை புரிந்தாள். கடைசியில் எல்லாரும் இதைக் கவனித்துவிட்டு பெஸ்ஸியையும் கேலி செய்ய ஆரம்பித்தார்கள். ஆனால் அவள் அதைப் பொருட்படுத்தவே யில்லை. அன்று அவன் பதினாலரை டாலர்களைத் தோற்றது வாஸ்தவம்தான்; ஆனால் பெஸ்ஸியைச் சந்தித்திருந்தானே! பெஸ்ஸியை அதிக அழகி என்று கூற முடியாது. ஆனால் அவள் இனிமையானவள், ரொம்ப நல்லவள், எல்லா மனிதர்களும் எப்படிப்பட்ட மனைவியை விரும்புவார்களோ அப்படிப்பட்டவள் பெஸ்ஸி.

அவன் மேலே மேலே பேசிக் கொண்டே போனான், மளமளவென்று; ஜுர வேகத்தோடு. தான் கல்யாணமே செய்துகொள்வதில்லை என்று தீர்மானித்திருந்தது பற்றிக் கூறினான். ஆனால் அது பெஸ்ஸியைச் சந்திப்பதற்கு முன்னால். அவள் எல்லாவற்றையும் அடியோடு மாற்றி விட்டாள்.... அவனையும் அறியாமல் இரண்டு மணி நேரம் ஓடிச்சென்று விட்டது. அவன் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தவர்களுக்கு அலுப்புத் தட்டியது. ஆனால் ஜோ அதை உணரவே யில்லை.

கடைசியில் ரயில் ஃப்ளாட்பாரத்தை அடைந்து நின்றது. போர்ட்டர் வந்து அந்தப் பெண்களின் சாமான்களை இறக்க உதவினார். அவர்களுக்கு ஜோவிடமிருந்து தப்பித்துக்கொண்டு போக முடிந்ததில் ரொம்பத் திருப்தி. அவர்களுக்கு இலேசாக நரம்புத் தளர்ச்சியே ஏற்பட்டு விடும்போலாகிவிட்டிருந்தது. அவர்களால் சரியாகப் புரிந்துகொள்ள முடியாத ஏதோ ஒரு விஷயம் ஜோவிடம் குடி கொண்டிருந்தது. முதலில் அவனை உற்சாக புருஷன், தமாஷ் பேர்வழி என்றெல்லாம் அவர்கள் நினைத்தார்கள். பிறகு குடி போதை தலைக்கேறி விட்டதோ அல்லது மூளைதான் இலேசாகப் பிசகிவிட்டிருக்கிறதோ என்று கருத ஆரம்பித்துவிட்டார்கள். கடந்த ஒரு மணி நேரமாக அவர்கள் ஒருவரை யொருவர், 'புரிகிறதா? தெரிகிறதா?' என்று கேட்பது போல் நிமிண்டி விட்டுக் கொண்டிருந்தார்கள்.

ரயிலை விட்டு இறங்க ஜோ அவர்களுக்கு உதவினான். ரயில் நகர ஆரம்பித்ததும் கருவிழியாள் கரமசைத்துக் கூறினாள்: ''பெஸ்ஸிக்கும், உங்கள் வாரிசுக்கும் என் அன்பைச் சொல்லுங்கள்.'' நீல விழியாள், ''எனக்காகக் குழந்தையை முத்தமிடுங்கள்'' என்றாள். ''நிச்சயமாக'' என்றான் ஜோ.

ரயில் போன பிறகு அப்பெண்கள் ஒருவரை யொருவர் ஒரு கணம் பார்த்துக் கொண்டார்கள். பிறகு சிரிக்க ஆரம்பித்தார்கள். கருநிற விழியாள் சொன்னாள்: ''பெஸ்ஸி அவனை நன்றாக வளைத்துப் போட்டு இறுக்கமாகத்தான் முடிந்து வைத்திருக்கிறாள்.'' நீல விழியாள், ''இந்த அசடைப் போல் வேறு ஒன்றை நீ உன் வாழ்நாளில் இதற்கு முன்னால் பார்த்திருக்கிறாயா?'' என்றாள்.

ஜோ தன் பெட்டிக்கு மீண்டும் வந்து சேர்ந்தான். 'நல்ல பெண்கள்' என்று நினைத்துக் கொண்டான். கடிகாரத்தைப் பார்த்தான். 5.25. அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. நேரம் வெகு சீக்கிரம் ஓடிவிட்டதே! மொபைலுக்குப் போய்ச் சேர அதிக நேரம் ஆகாது என்று நினைத்தான்.

தன் ஆசனத்தில் போய் அமர்ந்தான். இருப்புக் கொள்ளவில்லை. ‡ புகை பிடிக்கும் பெட்டிக்குப் போனான். அங்கே சிலர் ஹாஸ்ய

‡ புகை பிடிப்போருக்கென்று தனி ரயில் பெட்டி உண்டு மேனாட்டு ரயில்களில்.

---

கம்முன்னு கும்மா இருந்துடலே
காலை வீசிப் பின்தொடர்ந்தான்.

பந்தை வீசினார் பட்டாடி
பக்குன்னு பிடிச்சார் பதிலாளர்
பார்த்தான் தம்பி விசுவநாதன்
பறிகொடுத்தான் தன்விக்கெட்டையும்.

நான்காம் நாள்

நான்காம் நாளாம் கல்யாணம்
நகர்ந்தது ஓட்ட எண்ணிக்கை
நம்மவர் வீச்சு துவக்கத்தில்
நண்பர் டென்னரைக் கலக்கவில்லே.

பரபரப்பான சூழ்நிலையில்
பாய்ந்து வந்தார் பிரசன்னு
படபடவென்று நான்கு பேரை
பெவிலியனுக்கு அனுப்பி வைத்தார்.

ஐந்தாம் நாள்

வெற்றி ஓட்டம் எடுத்தது யார்
விஸ்வநாத்தா? பட்டாடியா? -- இல்லே
விச்சுக்காரர் கிஃப்போர்டே
வீசினார் ஒரு "நோ" பாலே.

எண்ணிக்கை ஒன்று கூடியது
எண்பத்தி ஆறும் மாறியது
இந்திய வெற்றி எக்களிப்பில்
எல்லோரும் தாண்டவம் ஆடினரே.

முடிவுரை

பட்டாடி துரானி பிரசன்னு-
மட்டை பிடித்து வென்றனரே
மட்டற்ற வெற்றிக் களிப்பினிலே-மக்கள்
பட்டாசு கொளுத்தி மகிழ்ந்தனரே! - ''மேனு''

வேடிக்கைகளை உதிர்த்துச் சிரித்துக் கொண்டிருந்தார்கள். அவர்களிடம் பெஸ்ஸியைப் பற்றிப் பேச விரும்பினான். ஆனால் அந்தச் சூழலில் அவனால் பெஸ்ஸியைப் பற்றிப் பேச்செடுக்க முடியவில்லை. திடீரென்று அவன் எண்ணினான்: 'நான் மாண்ட் கோமரியில் அந்த வாடிக்கையாளரிடம் ஆபாசக் கதைகளைக் கூறி சிரித்துக்கொண் டிருந்தபோதெல்லாம் தந்தி எனக்காக ஹோட்டலில் காத்துக் கொண்டிருந்தது!' அவன் முகம் வேதனையில் சிறுத்தது. தன் உள்ளத்தில் எழுந்த அந்த எண்ணத்தை நொறுக்கினான். சிகரெட்டை எறிந்து விட்டுத் தன் ஆசனத்துக்குத் திரும்பினான்.

மறுபடியும் அவனுக்கு பெஸ்ஸியைப் பற்றி யாரிடமாவது பேச வேண்டும் என்ற விநோதமான, தவிர்க்க முடியாத தேவை ஏற்பட்டது. அவளைப் பற்றிப் பேசிக் கொண்டே இருந்தால் அவளை எந்த ஆபத்தும் அணுகாது என்று தோன்றியது. ஒரு கிழவியும் அவள் கணவரும் தங்கள் ஆசனங்களில் அமர்ந்து சாப்பிட்டுக் கொண்டிருப்பதைப் பார்த்தான். ''நான் அங்கே வந்து உங்களுடன் பேசலாமா?'' என்று கேட்டான்.

''ஓ! பேஷாக!'' என்றார் முதியவர்.

ஜோ, வேகமாக, மூச்சு விடக் கூட நிற்காமல் பேசினான். மனைவி கணவரைக் கோபத்துடன் நோக்கினாள். 'பார்த்தீர்களா நீங்கள் என்னத்தை ஆரம்பித்து வைத்துவிட்டீர்கள் என்று?' — இப்படிக் கேட்பது போலிருந்தது அவள் பார்வை.

ஜோ தன் கல்யாணத்தைப் பற்றியும் தேன் நிலவைப் பற்றியும் பேசினான். எவ்வளவு சந்தோஷமாக இருந்தார்கள் என்பதை எடுத்துக் கூறினான். பெஸ்ஸி எத்தனை ருசியாகச் சமைப்பாள், வீட்டை எத்தனை நன்றாக வைத்துக்கொள்வாள், தான் அவளுக்கென்று வாங்கிய வீட்டை எவ்வளவு நேசித்தாள், குழந்தை பிறக்கப் போகிறது என்று அறிந்ததும் எவ்வளவு மகிழ்ந்தாள் என்பதையெல்லாம் கூறினான்.

அந்த வயதான மனிதருக்கு ஜோ புதிராக விளங்கினான். வெறித்துப் பார்த்தார் அவர். போதை மருந்தை ஊசி மூலம் உடலில் ஏற்றிக் கொண்டிருப்பானோ என்றும் கண்டக்டரைக் கூப்பிட்டுச் சொல்லலாமா என்றும் எண்ண ஆரம்பித்தார்.

ஜோவுக்கு நேரம் பற்றிய சிந்தனையே இல்லை. அவன் மேலே மேலே பேசிக் கொண்டேயிருந்தான். மளமளவென்று, பரபரப்புடன் தங்கள் குழந்தையின் கல்வி பற்றி பெஸ்ஸி என்னென்ன திட்டங்கள் போட்டு வைத்திருக்கிறாள் என்பது வரையில் கூறி விட்டான். அப்போது போர்ட்டர் வந்து அவன் கரத்தைத் தொட்டு மொபைல் ரயில் நிலையத்தை அவர்கள் நெருங்கி விட்டதைத் தெரிவித்தான். திடுக்கிட்டுச் சுய உணர்வு பெற்றான் ஜோ. மணியைப் பார்த்தான். 7.35. இரண்டு மணி நேரம் இவ்வளவு சீக்கிரம் ஓடிப் போய்விட்டதை அவனால் நம்ப முடியவே யில்லை.

''உங்களோடு பேசிக் கொண்டிருந்தது, ரொம்ப மகிழ்ச்சியாக இருந்தது'' என்று கூறி விடைபெற்றான் ஜோ. போர்ட்டருக்கு இனாம் தந்துவிட்டு ரயிலை விட்டு உற்சாகமாக இறங்கினான்.

ஸ்டேஷனில் இரும்பு வேலிக்கு அப்பால் மிஸஸ் தாம்ப்கின்ஸ் நிற்பதை ஜோ பார்த்தான். அவள் கறுப்பு உடை தரித்திருந்தாள். கறுப்பு முகத் திரை போட்டிருந்தாள். ஜோ விடுவிடுவென்று அவளை நெருங்கினான். மிஸஸ் தாம்ப்கின்ஸ் அவனைத் தன் கரங்களால் சுற்றி வளைத்து இரு முறை முத்தமிட்டாள். ''பாவம், ஜோ!'' என்றாள். பிறகு அவள் அவனுடைய உற்சாகமான புன்முறுவலுடன் கூடிய முகத்தை ஆச்சரியத்துடன்பார்த்தாள். அவள் கண்கள் வீங்கிச் சிவந்திருப்பதை ஜோ கவனித்தான்.

''என் தந்தி கிடைக்கவில்லையா?'' என்று கேட்டாள். புருவங்களை நெரித்தான் ஜோ, ஞாபகப்படுத்திக் கொள்ளும் முயற்சியில். கடைசியில் சொன்னான்: ''ஓ, கிடைத்ததே ஹோட்டலில்.''

''என் இரண்டாவது தந்தி கிடைத்ததா?'' வற்புறுத்திக் கேட்டாள் மிஸஸ் தாம்ப்கின்ஸ். அவள் ஜோவின் கண்களை அசையாமல் நோக்கினாள். பீதி உணர்ச்சி அவன் மேனி முழுவதும் படர்ந்தது: இனிமேலும் தனக்குத் தானே பொய் சொல்லிக் கொள்ள முடியாதென உணர்ந்தான். பெஸ்ஸியைப் பற்றிப் பேசிக் கொண்டே இருப்பதன் மூலம் அவளை உயிருடன் வைத்திருக்க இனிமேல் முடியாது. அவன் முகம் திடுமென்று வேதனையால் கோணியது. அவன் முகவாய் சிறு குழந்தையுடையது போல நடுங்கியது. அவன் இரும்பு வேலி மீது சாய்ந்து உடலுக்கு முட்டுக் கொடுத்துக் கொண்டான். மிஸஸ் தாம்ப்கின்ஸ் அவன் கையைப் பற்றிக் கூறினாள்: ''நீ குலைந்து போகக் கூடாது; நீ ஆண்மகனாக இருந்தாக வேண்டும். நீ இப்படிக் குலைந்து போகக் கூடாது ஜோ!''

கடைசியில் அவன் சொன்னான்: ''நான் உங்கள் தந்தியைப் படிக்கவில்லை. அவள் இறந்து விட்டாள் என்று அறிந்துகொள்ள நான் விரும்பவில்லை. அவளை இன்னும் சற்று நேரம் உயிரோடு வைத்திருக்க நான் ஆசைப்பட்டேன்.'' சாமான்களை ஏற்றித் தள்ளிச் செல்லும் வண்டி ஒன்றின் மீது அவன் உட்கார்ந்தான். தன் முகத்தைக் கரங்களுக்குள் ஒளித்துக் கொண்டான். அங்கேயே நீண்ட நேரம் அமர்ந்திருந்தான். மிஸஸ் தாம்ப்கின்ஸ் அவனுக்குக் காவலாக நின்றாள். அவளுடைய கருநிற முகத்திரை அவன் தோள் மீது படிந்திருந்தது.

''ஜோ'' என்று அழைத்தாள் அவள், பொறுமையுடன். ''ஜோ''.

அழுக்குச் சீருடையுடன் ஒருவன் வந்தான். ''ஸாரி மிஸ்டர்! நீங்கள் நகர்ந்தாக வேண்டும். இந்த வண்டி தேவைப்படுகிறது, எங்களுக்கு.'' ஜோ தன் கம்பெனித் தாள்கள் அடங்கிய பெட்டியையும் உடுப்புக்கள் அடங்கிய பையையும் தூக்கிக் கொண்டு மிஸஸ் தாம்ப்கின்ஸைப் பின்தொடர்ந்து ஸ்டேஷனை விட்டு வெளியேறினான்.

தமிழாக்கம்: **கி. ராஜேந்திரன்**

# இன்று!
# தொடுவதற்கு மென்மையான மழமழப்புக்கு
# வில்லியம்ஸ்
# ஸ்டெயின்லஸ் ஸ்டீல் பிளேடு

வெட்டி வதைத்து, உங்கள் தன்மானம் புண்பட 'முகத்திலடிக்கும்' முரட்டு பிளேடுகளோடு மல்லுக்கு நின்றது போதும். இதோ, க்ஷவர சோதனைக்கு ஒரு விடிவு: புதிய வில்லியம்ஸ் ஸ்டெயின்லஸ் ஸ்டீல் பிளேடு…கரடுமுரடாகிக் 'கருநிழல்' படர்ந்த கடின வளர்ச்சிக்குக் கடைகட்டுகிறது! கீறலுக்கும் தழும்புக்கும் விடைகொடுப்பீர். தீர்ந்தது சரும வேதனை. மீண்டது நம் சரும மென்மை.






*Creative Unit-542-Tam.*

# நானா பொறுப்பாளி?

இந்தோனேஷியக் கதை



☐ ''உன் அப்பாவைப் பற்றிக் கவலைப் படாதே! இளைஞர்களுக்கு எத்தனையோ பிரச்னைகள் இருப்பதுபோல் முதியவர்களுக்கும் பல பிரச்னைகள் உண்டு. அவை தாமாகத் தீர்ந்து விடும்!'' — இப்படி அவனைச் சமாதானப்படுத்தியவனுக்கே ஒரு பிரச்னை! உங்களால் தீர்க்க முடியுமா, பாருங்கள்! ★

**ப**ஸ்ஸில் கெரின்சிக்குப் போகும்பொழுது, எனக்கு ஹாஜி ஜக்ரியாவின் நினைவு வந்தது. அவரைப் பார்த்துப் பதினைந்து ஆண்டுகள் ஓடிவிட்டன. சுமத்ராவின் சிறு கிராமம் ஒன்றில் சமீபத்தில்தான் என் தந்தை காலமானார். அம்மாவுக்கு ஆறுதல் அளிக்கவும், குடும்ப சம்பந்தமான அலுவல்களைக் கவனிக்கவும் நான் சொந்த ஊர் திரும்ப வேண்டி வந்தது. இந்தப் பயணத்தில் கெரின்சியும் போய் வரும்படி இருந்தது. இங்கு ஹாஜியின் ரப்பர்த் தோட்டம் இருந்தது. நான் ஹாஜி ஜக்ரியாவின் வீட்டில்தான் தங்கினேன்.

ஆரம்பத்தில் பயணத்துக்குப் பஸ்ஸைத் தவிர வேறு சாதனம் எதுவும் தோன்றவில்லை. எனக்குப் பஸ் பயணம் சிரமமாயிருந்தது. ஏனென்றால் பாதாங்கிலிருந்து சுங்காயி பெனூ வரைக்கும் சாலை மிகவும் மோசமாயிருந்தது. பெரிய பெரிய ஆறுகளைப் படகுகளின் மூலமோ பாலங்களின் மூலமோ கடக்க வேண்டியிருந்தது. சாலையோ அடர்ந்த காடுகள், மலைச் சாரல்கள் வழியே ஓடிக்கொண்டிருந்தது. என்னால் அம்மா கூறியதை மறுக்க முடியவில்லை. ஆனால் நான் நினைப்பது போலவே பயணம் ஆரம்பத்திலிருந்து கடைசிவரை கஷ்டமாகத்தான் இருந்தது. பெரும் விபத்து எதுவும் நிகழவில்லை. ஆனால் இரண்டு தடவைகள் பஸ்ஸின் அச்சு ஒடிந்து விட்டது. அதிர்ஷ்டவசமாக 'ஆச்சல்' குழியைக் கண்டவுடனேயே பஸ் நிறுத்தப்பட்டு விபத்து தவிர்க்கப்பட்டது. டிரைவர் இந்தப் பாதையில் நன்கு பழக்கப்பட்டவன்போலும்! சமயத்துக்கு வேண்டியிருக்கும் என்பதற்காகப் பல அச்சுக்களை முன்கூட்டியே பஸ்ஸில் கொண்டு வந்திருந்தான். இருந்தாலும் ஏதாவது விபத்து நேர்ந்தால் மனிதன் பதற்றமடைந்து விடுவது இயல்புதானே?

பயணம் தொடங்கியதுமே பரிமாம் பள்ளி வாசலிலிருந்து திரும்பிக் கொண்டிருந்த ஓர் இளைஞன் உரக்கக் குரல் எடுத்துக் குரானின் 'ஆயத்'துகளைப் படித்துக் கொண்டிருந்தான். அவன் பக்கத்தில் உட்கார்ந்திருந்த பயணிக்கு வெய்யிலின் கொடுமை ஒரு புறம், சாலையின் இரட்டைத் திருப்பங்களில் பஸ் தூக்கித் தூக்கிப் போடும் ஆட்டம் மறுபுறம்; இளைஞனின் இந்தச் செவிடுபடும் ஒலி வேறு புறம். இந்த மும்முனைத் தாக்குதலைத் தாங்க முடியாமல், இளைஞனைக் கையெடுத்து வேண்டினான், பேசாமல் இருக்கும்படி. ஆனால் அவனது இந்தச் சாத்வீக எதிர்ப்பு இளைஞனுக்குத் துணிச்சலைக் கொடுத்தது. மேலும் குரலை உயர்த்தி விட்டான். ஆத்திரம் மீறிய பயணி அவன் வாயையே பொத்தி விட்டான்.

'உன்னைப் போன்ற 'காஃபிர்'கள் ஒழிய வேண்டும்!' என்று கத்திய இளைஞன் பையிலிருந்து கத்தியை எடுத்துக் கொண்டான். 'நீ யார்? குரான் ஷரீஃபின் ஆயத்துக்களைப் படிக்கக் கூடாது என்று தடுப்பதற்கு?' என்று கேட்டு அரபிச் சொற்களை மாரியாக உதிர்த்தான். அப்புறம் அல்லாவின் கோபத்துக்கும் நரகத்துக்கும் ஆளாகி அல்லலுறச் சபித்தான். பின்னர் ஒவ்வொருவராகப் பயணிகள் அனைவரையும் பார்த்தான். யாரும் அவனுக்கு அறைகூவல் விடாமற் போகவே அடங்கி விட்டான். பக்கத்துப் பயணியைக் கொலை செய்வதையும் மறந்து விட்டான். இரண்டு மடங்காகக் குரலை உயர்த்திக் குரான் ஓதுவதில் ஈடுபட்டான்.

போகப் போக மனிதர்களுக்கு எதுவுமே பழகிப் போய் விடுகிறது. ஒடிந்த அச்சுகள், ஆழமான ஆச்சல்கள், மதம் ஏறிக் குருடாகிவிட்ட இளைஞர்களின் கூச்சல்கள் எதுவுமே அவர்களை வருத்துவதில்லை.

என் கவனமும் இவற்றை யெல்லாம் தவிர்த்து மீண்டும் ஹாஜி ஜக்ரியாவை நோக்கிச் சென்றது. பல ஆண்டுகளுக்கு முன் நடந்த விஷயம். என் அப்பா அப்பொழுது கௌன்சிலில் ஜில்லாக் கமிஷனராக இருந்தார். நான் அப்பொழுது சிறு பிள்ளை. ஆனாலும் எனக்கு நன்கு நினைவிருக்கிறது. ஹாஜி ஜக்ரியா மிகவும் நல்ல மனிதர். நட்புக்கு உகந்த மனிதர். அறுவடைக்காலத்தில் அவர் எங்கள் அன்னைக்குப் பச்சரிசி



அனுப்பத் தவறுவதில்லை. அந்த அரிசியை அம்மா எங்களுக்காகப் பிஸ்கட் செய்வாள். வேட்டைக்குப் போய் வந்தால், அவர் எங்களுக்கு மிருதுவான மான் இறைச்சி அனுப்பி வைப்பார். நோன்புக்குப் பிறகு ஈத் பண்டிகை அன்று அவர் எங்களுக்குப் பரிசுப் பொருள்களாகக் கொண்டு தந்து குவித்து விடுவார். எல்லாவற்றுக்கும் மேலான உயர்ந்த பரிசுப் பொருள் எங்களைப் பொறுத்த வரையில் பட்டாசுக் கட்டுக்கள்தான். ஒரு தடவை அப்பா பரிசுப் பாக்கெட்டைத் திறந்தார். டைனமைட் அளவு பெரிய பட்டாசுக் கட்டுகள் இருந்தன.

நாங்கள் ஹாஜி ஜக்ரியாவை எங்கள் குடும்பத்தவராகவே கருதினோம். அவர் எங்கள் அன்புக்கன்பான உதார குணம் படைத்த சித்தப்பாவாகத் திகழ்ந்தார். அவர் நல்ல பணக்காரர். அவருக்குப் பல ஏக்கர்கள் நன்செய் நிலம் இருந்தது. காப்பிக் கொட்டை நல்ல விலை போனபோது அவரிடம் உயர் ரகக் காப்பித் தோட்டங்கள் பல இருந்தன.

என் தந்தைக்கும் நிறையக் காப்பித் தோட்டங்கள் உண்டு. ஆனால் ஹாஜியிடமிருந்த அளவுக்கு இல்லை. மார்க்கெட்டில் ரப்பர் விலை ஏறியபொழுது அப்பா காப்பிக்குப் பதிலாக ரப்பர் போடுவது என்று தீர்மானித்தார். ஹாஜி ஜக்ரியா அப்படி யெல்லாம் செய்யக் கூடாது என்று அவரைத் தடுத்தார். ஆனால் அப்பா நினைத்தது வேறு. காப்பியின் விலை ஒரேயடியாகச் சரிந்து விடும், அப்பொழுது ரப்பர் பயன்படும் என்று அவர் எண்ணினார். அப்பாவின் இந்த எண்ணத்தை ஹாஜி ஜக்ரியா பித்துக்குளித்தனம் என்றார். மக்கள் எப்பொழுதும் காப்பி அருந்துவார்கள், ஒருபொழுதும் ரப்பரைப் புசிக்க மாட்டார்கள் என்பது அவரது கருத்து.

ஒவ்வோர் ஆண்டும் ஹாஜி ஜக்ரியா, அப்பா, அம்மா மூவரும் சேர்ந்து மக்கா போவது என்று திட்டமிடுவார்கள். ஆனால் ஹாஜி ஜக்ரியா மட்டும்தான் எப்பொழுதுமே தனியாகப் போய் வரும்படி ஆயிற்று. என் தந்தை தம் ஆயுளில் 'ஹஜ்' யாத்திரை போகவே யில்லை. கையில் காசு இல்லாததனால்தான் அவர் ஹஜ் யாத்திரை போக முடியவில்லை என்பது எனக்குப் பிற்பாடு தான் தெரிந்தது. ஒவ்வோர் ஆண்டும் ஹாஜி ஜக்ரியா அப்பாவிடம் ''நண்பரே! ஏன் என்னை இப்படி அந்நியமாகக் கருதுகிறீர்கள்? என் பணத்தை உங்கள் பணமாக நினையுங்கள்! என் வீட்டை உங்கள் வீடாகக் கொள்ளுங்களேன்! அப்படியே என்னிடம் பணத்தை இனாமாகப் பெற விரும்பவில்லை யென்றால், கடனாக வாங்கிக் கொள்ளுங்கள். எப்பொழுது முடியுமோ, அப்பொழுது திரும்பத் தந்து விடுங்கள்!'' என்று கூறுவாராம்.

ஆனால் அப்பா அவருடைய இந்த யோசனையைச் சிரித்து மழுப்பி விடுவாராம். மிஞ்சிப் போனால் 'வேண்டாம்' என்று மறுத்து விடுவாராம். ஹாஜி ஜக்ரியாவும் முறுக்கென்று கோபித்துக் கொண்டு தம் வீட்டுக்குப் போய் விடுவாராம்.

எனக்குத் தெரிந்த வரையில் ஹஜ் யாத்திரை புறப்பட வேண்டிய அன்று ஹாஜி ஜக்ரியா மட்டுமே தனியாகத்தான் புறப்படுவார். அவர் மக்கா ஷரீஃப் சென்று ஹஜ்ஜை முடித்துக் கொண்டு திரும்பும்பொழுது அம்மாவுக்குப் பவளமும், புனித நீரும் கொண்டு வரத் தவறுவதில்லை.

இன்னொரு விஷயமும் எனக்கு நினைவு வருகிறது. ஹாஜி ஜக்ரியாவுக்கு லாட்டரி என்றால் ஒரே பைத்தியம். ஒவ்வொரு மாதமும் அவர் நானூறு ஐந்நூறு ரூபாய்க்கு லாட்டரி டிக்கெட்டுகள் வாங்குவார். எனக்குத் தெரிந்த வரை அவர் வாங்கிய நம்பர்களுக்குப் பரிசு வந்ததில்லை. ஆயினும் அவர் பழைய லாட்டரி டிக்கட்டுகளை விட்டெறிவதில்லை. பொத்திப் பொத்திப் பாதுகாத்து வைப்பார். ஓர் ஈத் பண்டிகையன்று இரவு – எனக்கு இப்பொழுகூட நன்றாக நினைவு இருக்கிறது. அப்பா – அம்மா என்னை ஹாஜியின் வீட்டுக்கு அழைத்துச் சென்றிருந்தார்கள். அப்பொழுது லாட்டரி பற்றிப் பேச்சு வந்தது. அவர் அப்பாவிடம் கூறினார்: ''நண்பரே! போன மாதம் கிட்டத் தட்ட எனக்குப் பரிசு கிடைத்த மாதிரிதான். பரிசுச் சீட்டின் இலக்கம் 567889. நான் வாங்கியிருந்த சீட்டின் நம்பர் 567888. இனி எனக்கு வெற்றி முகம்தான். அடுத்த மாதம் இன்னும் நிறையச் சீட்டுக்கள் வாங்குவேன்!''

அப்பா லாட்டரியையும் சூதாட்டத்தையும் வெவ்வேறாக நினைத்ததில்லை. எனவே அவர் ஹாஜியின் பேச்சை ஒப்புக்கொள்ளாமல் எதிர்த்தே வந்தார். இந்தத் தடவை அப்பாவின் கண்களில் ஒரு குறும்பு விளையாடியது. ''ஹாஜியாரே! இந்த லாட்டரியில் எத்தனை ரூபாய் வீணடித்திருப்பீர்கள், சொல்லுங்கள்!'' என்று கேட்டார்.

ஹாஜி ஜக்ரியா அறையிலிருந்து எழுந்து வெளியே போனார். ஒரு டிரங்குப் பெட்டியை எடுத்து வந்தார். அதில் லாட்டரி டிக்கட்டுகளாகவே இருந்தன. ''இதில் பத்தாயிரம் ரூபாய் பெறுமானமுள்ள டிக்கட்டுகள் இருக்கின்றன!'' அவர் டிரங்குப் பெட்டியைத் தட்டிக் கொடுத்துக் கூறினார்: ''இது அதிர்ஷ்ட விளையாட்டு. வெற்றி கண்டால் லாபம். வெற்றி காணவிட்டால் மாதம் ஐந்நூறு அறுநூறு என்னு. இது என்ன பெரிய விஷயம்?''

அப்பா தலையை அசைத்து, ''இந்த உருப்படாத காகிதங்களினால் என்ன பயன்? தலையைச் சுற்றி விட்டெறியுங்கள்! இவை தீயவை, துன்பத்துக்குக் காரணமாகக் கூடியவை!'' என்றார்.

ஹாஜி ஜக்ரியாவின் சிரிப்பு அறையில் எதிரொலித்தது. ''இல்லை!'' அவர் விளக்கினார்: ''''இன்பத்துக்குக் காரணம் இந்த லாட்டரிச் சீட்டுக்கள்! பெரிய பரிசுக்கு எத்தனை அருகில் இருக்கிறோம் என்பதைத் தெரிந்து கொள்ளுவதில் ஒரு குதூகலம் ஏற்படுமே! ஒன்றோ இரண்டோ நம்பர் வித்தியாசம்தானே?''

* * *

நான் இப்படி நினைவுகளில் திளைத்தபோது பஸ் ஹாஜி ஜக்ரியாவின் வீட்டுக்கு அருகில் நின்றது. நான் பஸ்ஸிலிருந்து குதித்துவிட்டேன். ஹாஜி ஜக்ரியா முன்பிருந்தே வாசலில் எதிர்பார்த்த வண்ணம் நின்றிருந்தார். என்னை ஆரத் தழுவி வரவேற்றார். உணவு தயாரா யிருந்தது. உணவு அருந்திய பின்

நான் வீட்டைப் பார்த்தேன். மிகவும் மாறிப் போயிருந்தது. ஏதோ சூன்யம் நிலவுகிறாற் போலத் தோன்றியது. தரையில் விரிப்புக்களைக் காணோம். குழந்தைகளின் ஆரவாரமும் கேட்கக் காணோம். ஆம், குழந்தைகள் எத்தனை நாட்கள்தான் குழந்தைகளாக இருப்பார்கள்? அவர்களும் பெரியவர்களாகிப் போயிருந்தார்கள், என்னைப் போலவே.

ஹாஜிக்கு ஆறு குழந்தைகள். ஒரு பெண் மரியம் மட்டும் இன்னும் கல்யாணமாகாத கன்னியாக இருந்தாள். குழந்தைப் பருவத்தில் அவள் எங்களோடு விளையாடுவாள். இப்போது அவள் அழகாக, இளமை சொட்டும் எழிலரசியாகக் காட்சியளித்தாள். நான் அவளைப் பார்த்தது பார்த்தபடியே இருந்தேன்.

## வெற்றியின் இரகசியம்

கடந்த போரின்போது பிடிபட்ட பாகிஸ்தானியப் போர்க் கைதிகளின் முகாமுக்குச் சென்று பார்வையிட்டு, அவர்களுடைய குறைகளைக் கேட்ட மானெக்ஷா ஒவ்வொருவரையும் தனியே சந்தித்துக் கைகுலுக்கினார். மானெக்ஷாவின் கையைக் குலுக்கிய ஒரு பாக் சுபேதார் சொன்னார்:

''இப்போதுதான் உங்கள் படையின் வெற்றியின் காரணம் புரிகிறது. நான் பாகிஸ்தான் படையில் இருபத்தைந்து வருடங்களாகப் பணி புரிகிறேன். ஆனால், இதுவரையில் ஒரு பாக் படைத் தலைவர்கூட எங்களுடன் கை குலுக்கியதில்லை!''

ஆதாரம்: 'ஹிம்மத்'

தகவல்: 'சம்பத்குமாரி'



ஹாஜி ஜக்கரியா பல விஷயங்களைப் பேசினார். பழைய நாட்களை நினைவுபடுத்தினார். உன்னைக் கண்டதில் மகிழ்ச்சி என்று அடிக்கொரு முறை கூறி மகிழ்ந்தார். அதே கையோடு 'உன் தந்தை இறந்துவிட்டது குறித்து வருந்துகிறேன்' என்று கூறி வருந்தவும் செய்தார்.

பிறகு திருமணமான பெண்கள்—பிள்ளைகள் எல்லோரும் என்னைப் பார்க்க வந்தார்கள்.

மரியம் தன் அம்மாவுக்கு உதவியாகச் சமையலறைக்குச் சென்றுவிட்டாள். அப்பொழுது ஹாஜி ஜக்கரியா ''குழந்தாய்! நாங்கள் இப்பொழுது ஏழையாகி விட்டோம். பல வருஷங்களுக்கு முன்பு காப்பிக் கொட்டையின் விலை மிகவும் சரிந்தபொழுது நான் உன் அப்பாவைக் காப்பி வடித்தேன். காப்பிக்குப் பதிலாக ரப்பர் பயிர் செய்தேன். ஆனால் ரப்பர் மரம் வளர்ந்தபொழுது ரப்பர் விலை சரிந்து விட்டது! நான் முட்டாள்தனமாக அவற்றை அழித்து விட்டுக் காப்பியைப் பயிர் செய்தேன். ஆனால் காப்பி விலை அப்படியே ஏறாமல் இறங்காமல் இருந்தது. உன் அப்பா கொடுத்து வைத்தவர். அவர் மந்த நிலையிலும் ரப்பருடனேயே ஒட்டிக் கொண்டிருந்தார். கொரியாப் போர் ரப்பரைத் தங்கத்தின் விலைக்கு உயர்த்திவிட்டது. அவருக்கு நல்ல லாபம். பணம் பண்ணினார். அவர் தம் தோட்டத்தைக் கவனித்துக் கொள்ளுமாறு என்னைக் கேட்டுக்கொண்டார். அது எனக்கு மிகவும் உதவியாக இருந்தது. இப்பொழுது ரப்பர் விலை மீண்டும் இறங்குமுகமாக இருக்கிறது. என்ன ஆகுமோ, எனக்கு விளங்கவில்லை!'' என்றார்.

நான் வந்த விஷயத்தை அவருக்குச் சொன்னேன். ரப்பர் தோட்டத்தை அவரே மேற்பார்க்க வேண்டும், அப்பா இல்லாததால் அவரே தம் சொந்தத் தோட்டமாகப் பாவித்துக் கவனிக்க வேண்டும் என்று அம்மா சொல்லச் சொல்லி விருந்தாள்.

அப்புறம் அன்று மாலை அவர் மசூதிக்குப் போனார். மரியம் வந்து பேசிக் கொண்டிருந்தாள். அவள் பேச்சிலிருந்து, காப்பியின் விலை இறங்கியபொழுது அவள் தந்தை சிறிதும் அரற்றிக் கொள்ளவில்லை என்றும், வழக்கம் போல் ஒவ்வொரு ஆண்டும் மக்கா ஷரீஃப் போய் வந்தார் என்றும், லாட்டரிச் சீட்டுகள் வாங்குவதிலும் குறை வைக்கவில்லை என்றும் தெரிய வந்தது. பிற்காலத்தில் 'ஹஜ்' போவதற்காகக் கொஞ்சம் நெல் வயல்களை, அதாவது நன்செய் நிலங்களை மட்டும் விற்க வேண்டி வந்ததாம்.

ஆனால் மாபெரும் பேரதிர்ச்சி ஜப்பான் வீழ்ச்சிக்குப் பின் ஏற்பட்டது. ஹாஜி ஜக்கரியா நாட்டுப் பற்றுள்ளவர். அவரது பிள்ளைகள் புரட்சிப் படையில் சேர்ந்திருந்தார்கள். அவர் ரிபப்ளிகன் ஆட்சியின் தேசியப் பத்திரம் வாங்குவதற்காகத் தம் நிலங்களையே விற்றிருக்கிறார். இதன் அடித்தளத்தில் நாட்டுப் பற்று மட்டும்தான் ஓடியது என்று கூற முடியாது. ரிபப்ளிகன் அரசாங்கம் மூன்று நான்கு ஆண்டுகளுக்குப்பின் வட்டியோடு முதலைத் திருப்பித் தந்துவிடுவதாக உத்திரவாதம் அளித்திருந்தது. ஆனால் இந்தோனேஷியா விடுதலை பெற்று விட்டது. அரசாங்கப் பத்திரங்களில் முடங்கிய பணத்தைத் திருப்பித் தர முடியவில்லை. அப்புறம் கொரியாப் போர் தொடங்கியது. ஆனால் நல்ல வேளையாக என் தந்தை தமது ரப்பர்த் தோட்டத்தைக் குத்தகைக்கு ஹாஜி ஜக்கரியாவிடமே விட்டிருந்தாராம். அதுவே அவர்களைக் காப்பாற்றியதாம்.

மரியமின் பேச்சிலிருந்து ஹாஜி ஜக்கரியா இன்னும் நல்ல நிலையில் இருப்பதாகவே எனக்குப் பட்டது. அவருடைய பிள்ளைகள் அனைவரும் வேலையில் இருந்தனர். அவருக்கு உதவியும் வந்தனர். அவரிடம் இன்னும் நன்செய் நிலம் இருந்தது. எனவே, சாப்பாட்டுக்கு அரிசி வாங்க வேண்டிய நெருக்கடி ஏற்பட

வில்லை. ''ஆனால்...'' மரியம் கூறினாள்: ''முன்போல் அவரால் லாட்டரிச் சீட்டுகள் வாங்க முடியவில்லை. ஆண்டுதோறும் ஹஜ்ஜுக்குப் போய் வர முடியவில்லை. இந்தத் துயரம்தான் அவரை வெகுவாக வாட்டுகிறது!''

ஹாஜி ஜக்கியா மசூதியிலிருந்து திரும்பி வந்ததும் நான் குறும்பாக அவரிடம் லாட்டரி பற்றிக் கேட்டேன். அவர் முகம் பிரகாசித்தது. படுக்கை அறையிலிருந்து பெரிய டிரங்குப் பெட்டியை எடுத்து வந்தார். அதைத் திறந்தவாறே, ''உனக்குத் தெரியும் அல்லவா, நான் மாதா மாதம் லாட்டரி டிக்கட் வாங்கி வந்தது? பெரும்பாலும் பரிசு கிடைக்கிறாற்போல் நம்பர் வந்து ஏமாற்றி விடும். இந்தப் பெட்டியில் எத்தனை ரூபாய்களுக்கு லாட்டரி டிக்கட்டுகள் இருக்கலாம் சொல்லு!'' என்றார்.

''ஆ!... ஆயிரக் கணக்கில் இருக்கும்!'' என்றேன் நான்.

''குழந்தாய்! 'ஆயிரக் கணக்கில்' என்று வெறும் குத்து மதிப்பாக மட்டும் சொல்லி விடாதே! எனக்குக் கணக்காகத் தெரியும், எத்தனை ரூபாய்களுக்கு வாங்கியிருக்கிறேன் என்று! ஐம்பத்தாறாயிரம் ரூபாய்க்கு வாங்கியிருக்கிறேன். ஒரு ரூபாய் குறைவும் இல்லை; கூடவும் இல்லை. இவை அந்தக் காலத்து ரூபாய்! மதிப்புப் போன இந்தக் காலத்துப் பணம் இல்லை! தெரிந்ததா?'' என்றார்.

''இத்தனை ரூபாய்க்கு வாங்கியும் உங்கள் டிக்கட்டுக்கு ஒரு பரிசும் விழவில்லையே!'' என்று நான் வியப்புடன் கேட்டேன்.

''இல்லை!'' ரத்தினச் சுருக்கமாகப் பதில் சொல்லிப் பெரிதாகச் சிரித்தார் அவர். பிறகு அவர் பெட்டியை மூடித் தமது படுக்கை அறைக்கு எடுத்துச் சென்றார். போகும் பொழுது, ''குழந்தாய்! நிம்மதியாகத் தூங்கு!'' என்றார். அப்பொழுது நான் ''ஐம்பத்தாறாயிரம் ரூபாய்! அதுவும் பழங்காலத்து ரூபாய்! இன்றைய மதிப்புப்படி பதினைந்து லட்சத்துக்குச் சமானம்! உங்களுக்குத் தெரியும் அல்லவா? அந்த ரூபாய்கள் இன்று உங்கள் கையில் இருந்தால், விலை விங்கி விட்ட இந்த நாட்களிலும் நீங்கள் என்ன என்னவெல்லாமோ வாங்கலாமே! இன்று பெருந்தனக்காரர்களில் ஒருவராக இருக்கலாமே!'' என்றேன்.

ஹாஜி ஜக்கியா சற்று நின்றார்; சிரித்தார். சிரிப்பு ஏனோ சட்டென்று அடங்கிவிட்டது. அவர் முகத்தின் நிறம் மாறியது. அவர் வியப்புடன் என்னைப் பார்த்தார். பிறகு, ''என்ன உளறுகிறாய்! நிம்மதியாகத் தூங்கு! பயணத்தினால் நீ களைத்துப் போயிருக்கிறாய்!'' என்று கூறிவிட்டு ஏதோ முணுமுணுத்துக் கொண்டே சென்றார்.

எனது அறை பிராயம் முதிர்ந்த அந்தத் தம்பதியின் அறைக்கும் மரியத்தின் அறைக்கும் நடுவில் இருந்தது. மரியம் நிம்மதி இழந்து தவிப்பதாகத் தோன்றியது எனக்கு. 'அவள் தூங்கவில்லை என்றால் அதற்கு நானா பொறுப்பாளி?' என்று என் மனத்தைக் கேட்டுக் கொண்டேன். 'நீ தூங்கவில்லை என்றால் அதற்கு யார் பொறுப்பாளி?' என்று அது என்னைத் திருப்பிக் கேட்டது.

நான் ஜாகர்த்தா திரும்பி ஒரு மாதம் தான் ஆகியிருக்கும். மரியத்தினிடமிருந்து கடிதம் வந்தது. நான் வந்து போனதிலிருந்து அவளுக்குத் தன் தந்தையைப் பற்றியே கவலையாக இருக்கிறது என்றும், அவர் தம் அறையிலேயே எப்பொழுதும் அடைந்து கிடக்கிறார் என்றும், லாட்டரிச் சீட்டுக்களைக் கொட்டிக் கொட்டி எண்ணிக் கொண்டிருக்கிறார் என்றும் எழுதியிருந்தாள். அவர் மணிக் கணக்கில், நாட்கணக்கில் யாருடனும் பேசுவதில்லை என்றும் குறிப்பிட்டிருந்தாள்.

நான் மரியத்துக்கு எழுதிய கடிதத்தில், ''கவலைப்படாதே! இளைஞர்களுக்கு எத்தனையோ பிரச்னைகள் இருப்பது போல் முதியவர்களுக்கும் பல பிரச்னைகள் இருக்கும். அவை தானாகவே தீர்ந்து விடும்!'' என்று குறிப்பிட்டிருந்தேன்.

இதற்கு ஒரு வாரத்துக்கெல்லாம் மரியம் தந்தியடித்திருந்தாள், 'அவள் தந்தை காலமாகி விட்டார்!' என்று. தந்தியைத் தொடர்ந்து வந்த கடிதத்தில், ஹாஜி ஜக்கியா தற்கொலை செய்து கொண்டு விட்டார். அவர் அறையை மூடிக் கொண்டு துப்பாக்கியினால் தம் மூளையைக் குறி வைத்துச் சுட்டுக் கொண்டு விட்டார். கதவை உடைத்துப் பார்த்தபொழுது தரையில் லாட்டரிச் சீட்டுகளும், ரிபப்ளிகன் அரசாங்கத்தின் கடன் பத்திரங்களும் சிதறிக் கிடந்தன. அவற்றில் இரத்தத் துளிகள் சிதற அவற்றின் மேல் அவர் விழுந்து கிடந்தார் என்றும் விவரமாகக் குறிப்பிட்டிருந்தாள். கடைசியில், ''என் அம்மாவும் நோய்ப் படுக்கையில் இருக்கிறாள். என்ன செய்வது என்று விளங்கவில்லை!' என்று முடித்திருந்தாள்.

இப்பொழுது நான் என்ன செய்வது என்பதுதான் என் பிரச்னை. பல இரவுகளாக எனக்குத் தூக்கம் வரவில்லை. நான் என்னையே இவ்வளவுக்கும் குற்றவாளியாகக் கருதுகிறேன். அவர் மறந்திருந்த லாட்டரி டிக்கட்டுகளை நினைவுபடுத்தி நான்தான் அவரைக் கொலை செய்து விட்டேன். ஏனெனில் அவருடைய முட்டாள்தனத்தைச் சுட்டிக் காட்டிய முட்டாள்தனம் என்னுடையது தானே? அதனால் துயருற்றுத்தானே அவர் தற்கொலை புரிந்து கொண்டு விட்டார்! எனக்கு மரியத்தினிடம் ஆழ்ந்த அன்பு இருக்கிறது. ஆனால் தகப்பனைக் கொன்றவன் அவருடைய மகளை எப்படி மணம் புரிந்து கொள்வது?

ஹாஜி ஜக்கியா லாட்டரி டிக்கட்டுகளின் காரணமாகத் தற்கொலை செய்து கொள்ளவில்லை. அவர் தற்கொலை செய்துகொண்டதற்குக் காரணம் ரிபப்ளிகன் ஆட்சியின் தேசியக் கடன் பத்திரம்தான்; அதைத் திருப்பித் தரக் கையாலாகாத அரசாங்கத்தின் நிலையை எண்ணி நொந்துதான் என்று உறுதியானால்— உறுதியானால் மட்டும் போதாது; மனச்சாட்சி பூர்வமாக என்னை நானே சமாதானம் செய்து கொள்ள முடியுமானால்தான் நான் மரியத்தை மகிழ்ச்சியுடன் மணந்து கொள்ள முடியும்!

அதற்கு என் மனம் உத்தரவாதம் தர மறுக்கிறதே! என்ன செய்வேன்?

ஹிந்தியிலிருந்து தமிழாக்கம்: **ரா. வீழிநாதன்**

இன்னுமொரு குழந்தையைப் பெறுவதற்குமுன் சற்று

# யோசியுங்கள்

முதலில் இந்தக்
குழந்தையை நன்றாக
வளர்க்க வேண்டாமா?

இக்குழந்தையை நன்றாக படிக்க வைக்க வேண்டாமா? உங்கள் விருப்பப்படி, குழந்தைக்கு வசதிகள் அனைத்தும் அளிக்க வேண்டாமா? இன்னொரு குழந்தையை உடனே பெற்றால், இதெல்லாம் முடியுமா? சிரமம் தான். அடுத்த குழந்தை உடனே வேண்டாம் என்று நீங்கள் கருதுவது இயற்கைதானே.

நீங்கள் மட்டுமல்ல; உலகெங்கிலும் தம்பதிகள் இவ்விதம்தான் கருதுகிறார்கள். வளமுடன் வளர்க்க வசதிகள் பெருகும் வரை, அவர்கள் இன்னொரு குழந்தையைப் பெறுவதில்லை. நீங்களும் 'நிரோத்' உபயோகித்து குழந்தை பெறுவதைத் தள்ளிப்போடலாம். அனைவரும் விரும்பி ஏற்கும் ரப்பர் கருத்தடைச் சாதனம் நிரோத்; இது ஆண்களுக்கானது. தலைமுறை தலைமுறையாக உபயோகத்தில் இருந்துவரும் சிறந்த, எளிய, பாதுகாப்பான கருத்தடைச் சாதனம் நிரோத். நீங்களும் நிரோத் உபயோகியுங்கள்.

நிரோத் எங்கும் கிடைக்கிறது. அரசாங்க ஆதரவு விலை 15 பைசாவுக்கு 3




இன்னொரு குழந்தையை வளர்க்க வசதி பெறும் வரை
உபயோகியுங்கள்

## நிரோத்



லட்சக்கணக்கான பேர் விரும்பி ஏற்கும் எளிய, பாதுகாப்பான
கருத்தடைச் சாதனம் நிரோத்.

davp 71/440

பலசரக்குக் கடைகள், மருந்தகங்கள், வெற்றிலைபாக்குக்கடைகள் இங்கெல்லாம் நிரோத் விற்பனையாகிறது



### செட்டிநாடு குமாரராஜா

# எம். ஏ. எம் முத்தைய செட்டியார் B.A.

1929 செப்டம்பர் 6உ — 1970 ஜனவரி 24உ

சென்னை ஷெரீப் (1957-58)
தென்னிந்திய வர்த்தக சங்கத் தலைவர் (1958-60)
பிரபல தொழிலதிபர் — வள்ளலார்

மூன்று ஆண்டுகளுக்கு முன் 24-1-70 அன்று எங்களை விட்டுப் பிரிந்தும் எங்கள் நெஞ்சில் என்றும் நிலைத்திருக்கும் அப்பெருந்தகையோனின் அன்பு நினைவிற்கு அஞ்சலி செலுத்தும் வகையில் அன்னார் ஆற்றி வந்த நற்பணிகளைத் தொடர்ந்து மேற்கொள்வதென உறுதி பூணுகிறோம்.

**பின்கண்ட நிறுவனங்களின் நிர்வாகத்தினரும் ஊழியர்களும்:**

செட்டிநாடு சிமெண்ட் கார்ப்பொரேஷன் லிமிடெட், சென்னை & குமாரராஜா முத்தைய நகர், கரூர் ❁ செட்டிநாடு கார்ப்பொரேஷன் பிரைவேட் லிமிடெட், சென்னை & சிலோன் ❁ மதுரை சௌத் இந்தியா கார்ப்பொரேஷன் பிரைவேட் லிமிடெட், சென்னை, மதுரை, பெங்களூர், விசாகப்பட்டினம், செகந்திராபாத், விஜயவாடா மற்றும் இதர கிளைகள் ❁ சௌத் இந்தியா கார்ப்பரேஷன் பிரைவேட் லிமிடெட், கொச்சி & புதுக்கோட்டை ❁ சௌத் இந்தியா ஸ்டீரக்கரல் கார்ப்பரேஷன் லிமிடெட், சென்னை & கிளைகள் ❁ ஸ்ரீ கருணாம்பிகை ஜின்னிங் பேக்டரி, அவிநாசி ❁ துபாரி குருப் எஸ்டேட்ஸ், சேஷகிரி எஸ்டேட், குடகு ❁ குண்டள்ளி எஸ்டேட் & தொட்லகுண்டா எஸ்டேட், மைசூர்.

# இலக்கிய மலர்கள்

## 11. ஒரு மணியில் இரண்டு நாதம்

அந்தக் காலத்தில் அரச நீதியில் ஏதாவது முறைகேடு நேர்ந்தாலோ அல்லது பொதுமக்களில் யாருக்காவது முறையீடு இருந்தாலோ, சம்பந்தப்பட்ட மனிதர் நேரே விறுவிறு என்று அரண்மனை வாயிலுக்குச் செல்ல வேண்டியது. அங்கே கடை வாசலில் ஒரு பெரிய மணி தொங்கும். ''ஆராய்ச்சி மணி'' என்று பெயர். அதை அசைத்து விட்டால் போதும். மன்னனே நேரில் கூப்பிட்டு, என்ன சங்கதி என்றுவிசாரணை நடத்துவான்.

ஒட்டக் கூத்தருடைய காலத்தில் சோழனுடைய ஆட்சியில் இந்தப் பெரிய மணி கடைவாயிலில் தொங்கியது உண்டு. ஆனால் தொங்கியதோடு சரி அதன் வேலை! மற்றப்படி அதற்கு வேறு வேலை இல்லை; அது அசைவு இல்லை! அலுவல் இல்லாமல், நாக்கு அசையாமல் உறங்கியது அந்த ஆராய்ச்சி மணி!

அரசாட்சியில் ஏதாவது தவறு, முறைகேடு நடந்தால் [illegible] அந்த மணியைப் போய் யாரும் [illegible]ர்கள்! சோழனுடைய ஆட்சி ஒழுங்குக் [illegible] பெற்றதால் மணியினுடைய வாய் [illegible] இருந்தது! ஆராய்ச்சிக்கு இடமே இல்லை.

ஒட்டக்கூ[illegible] இந்த உண்மையைப் பாட ஆரம்பித்தார், மணியைப் பார்த்தவாறு அரண்மனையில் [illegible] எப்படி?

**ஆடும் கடைமணி**
**நாஅசையாமல் அகிலமெல்லாம்**
**நீடும் குடையில்**
**தரித்த பிரான்!**

கடைமணியின் நாக்கு அசைவதற்கே இடமில்லாமல், அவசியமில்லாமல், இந்த அகில உலகத்தையும் தன்னுடைய பெரிய (நீடும்) குடையின் கீழ் வைத்து அறத்தோடும் அருளோடும் ஆட்சி செய்து வருகிற எங்கள் அரசர் பெருமான்!

இவ்வாறு பாட்டை ஆரம்பித்துக் கொண்டே ஒட்டக்கூத்தர் அரண்மனையில் நுழைகிறார்.



தரித்த பிரான்

என்று ஒட்டக்கூத்தர் சொல்லி முடித்ததும், இன்னொரு குரல் பின்னாலிருந்து வந்து அந்தப் பாடலை முடிக்கிறது.

என்று

**நித்தம் நவம்**
**பாடும் கவிப்பெரு மான்ஒட்டக் கூத்தன்.**

குடையில் தரித்த பிரான் என்று தினந்தோறும் (நித்தம்) பாடிக் கொண்டே, புதிது புதிதாக (நவம்)ப் புதினம் பாடிக்கொண்டே இருக்கிறாரே கவிப் பெருமானாகிய ஒட்டக்கூத்தர் — என்று தொடர்கிறது பின்னால் வந்த குரல்!

புலவர் திகைத்துப்போய் யார் இவ்வாறு தமது பாடல்களின் பின்னடிகளைப் பூர்த்தி செய்வது என்று திரும்பிப் பார்க்கும்போது, சோழ மன்னனே அவ்வாறு பாடிக்கொண்டு வருகிறான். எவ்வாறு?

**பாடும் கவிப்பெரு மான்ஒட்டக்**
**கூத்தன் பதாம் புயத்தைச்**
**சூடும் குலோத்துங்க சோழன்என்**
**றே என்னைச் சொல்லுவரே!**

[பதாம்புயம் — பாதாம்புயம்: பாதத் தாமரை. அம்புயம் — அம்புஜம், தாமரை.]

அப்படிப் பாடுகிற கவிப் பெருமானாகிய ஒட்டக்கூத்தனுடைய பாத கமலங்களைத் தலையிலே சூடிக்கொள்கிற என்னைக் குலோத்துங்க சோழன் என்று அழைப்பார்கள் — இவ்வாறு பாடலை முடிக்கிறான் சோழப் பேரரசன்!

''ஆடும்'' என்பதிலிருந்து ''தரித்த பிரான்'' என்பது வரை ஒட்டக்கூத்தர் பாடியது. ''என்று'' என ஆரம்பித்து அப்படியே பாடலை வாங்கி மடக்கிச் ''சொல்லுவரே'' என்று முடிப்பது சோழன்.

புலவர் பாதியும் அரசன் பாதியுமாகத் திகழ்கிறது பாடல், கவிஞன் பாதியும் ரசிகன் பாதியுமாகக் காட்சி தருகிற கலைமகளின் திருவுருவத்தைப் போலே!

கவிஞன் பாதி உருவமும், ஸஹிருதயன் பாதி உருவமுமாக முழுமை கொண்டு நிற்கிறாள் சரஸ்வதி தேவி என்று ஒரு ஸம்ஸ்கிருதப் பாடல் கூறுவது இங்கே வேறொரு பொருத்தத்தில் நினைவுக்கு வருகிறது!

**ஆடும் கடைமணி நாவசை யாமல்**
**அகில மெல்லாம்**
**நீடுங் குடையில் தரித்தபி ரான்என்று**
**நித்தநவம்**
**பாடுங் கவிப்பெரு மான்ஒட்டக் கூத்தன்**
**பதாம் புயத்தைச்**
**சூடுங் குலோத்துங்க சோழன்என் றேஎனைச்**
**சொல்லுவரே!**

புலவன் அரசனுடைய புகழைப் பாடவும், அந்தப் புகழையும் சேர்த்துப் புலவர் மீது ஏற்றி அவருடைய காலடிகளைத் தலையிலே சூடிக் கவியடிகளை முடிக்கிறது, அரசப் புலமை! கவிப் புலமைக்குத் தலை தாழ்த்துகிற செவிப் புலமை அது!

மணியான பாடல். நாக்கு அசையாத மணியைப் பற்றி இரண்டு நாக்குகள் அசைகின்றன! ஒன்று புலவர் நா, மற்றது அரச நா! இரண்டு குரலுமே ஒரே சுருதியில் சேர்ந்து இரு குரலிசையாகச் சுகமாக ஒலிக்கிறது. மணிக்கவி நாதம்!

வட்டமேஜை

# குறுநாவலும் புது நாவலும்

திரு கே. பாலசந்தரின் 'மூன்று முடிச்சுக்கள்' கதையின் ஆரம்பமே மிகவும் விறுவிறுப்பு. அவர் முன்னுரையில் அமரர் ராஜாஜிக்குச் செலுத்திய அஞ்சலி மிகவும் சிறப்பாக இருக்கிறது. Statesman, Politician இருவருக்கும் உள்ள வேறுபாட்டையும் மிக அழகாக விளக்கியுள்ளார்.

திருச்சி — 2
12—1—73 வி. ராமதாஸ்

மகரிஷியின் கதைகளை விரும்பிப் படிப்பவன் நான். அவரின் கதைகள் பிரச்னைகளைக் கண் முன் கொண்டு வந்து நிறுத்துகின்றன. கண்கள் கண்ணீரைச் சுமக்கின்றன.

திருச்சி — 9
12—1—73 கபிஸ்தலம் ஆஷா

'கல்கி பொங்கல் மலர்' என் போன்ற இளைஞர்களை மிகவும் கவர்ந்துள்ளது. கே. பாலசந்தரின் 'மூன்று முடிச்சுக்கள்' கதையின் விளம்பரத்தை ரேடியோவில் வர்த்தக ஒலிபரப்பில் கேட்டும், கல்கியில் பார்த்தும் ஆவலுடன் எதிர்பார்த்திருந்த எங்களை முதல் அத்தியாயமே மிகவும் கவர்ந்துள்ளது. அட்டைப் படம், கதைகளின் முகப்புப் படங்கள் வரைந்த கல்பனாவும், மாருதியும் முறையே பாலசந்தர், மகரிஷி கதைகளுக்கு உயிரூட்டியுள்ளார்கள். மற்றைய ஓவியர்களின் கைவண்ணமும், சோவியத் நாட்டின் ஐம்பதாண்டு நிகழ்ச்சிப் படங்களும், துணுக்குகளும் சேர்ந்து மலரை மணம் பரப்பச் செய்துவிட்டன.

குமராட்சி
12—1—73 மா. நடராஜன்

"இளைய பாரதத்தினர்", "புரட்சி இயக்குந"ரின் தொடர் சித்திரம் நன்றாக அமைந்திருக்கிறது. அமரர் ராஜாஜிக்கு அவர் சமர்ப்பித்துள்ள தம் முதல் முயற்சி போற்றுதற்குரியது. அடக்கமும், ஆழ்ந்த அறிவும் உள்ள அவர் எழுத்துக்களைப் பல்லாயிரக் கணக்கான வாசகர்கள் உவப்புடன் படித்துக்கொண்டிருக்கிறார்கள் என்பதில் சிறிதும் ஐயமில்லை. வாழ்க அவர் சீரிய பணி!

திருச்சி
15—1—73 குமார், பி.ஏ.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras 600031
Managing Editor: T. Sadasivam

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

இலங்கையில் விலை 45 சதம் (தபால் செலவு தனி)

# நீடித்திருப்பது




# டுலக்ஸ்

## ஒப்பனையில்

குறைந்த அளவு
டுலக்ஸ் பெயின்ட்
கொண்டு பரந்த
இடப்பரப்பிற்குப் பிழையின்றி
பூசலாம். அழுக்குகளை
நீர்கொண்டு நன்றாக
நீக்கலாம். ஒரு பொழுதும்
மங்காது.







உங்கள் கன்ட்ராக்டரிடம் கேளுங்கள்: இவர் டுலக்ஸ் எப்படி ஆச்சரியகரமாக உங்கள் வீட்டிற்கு அதிக சோபை அளிக்கிறது என்பதை விளக்கிக் காட்டுவார்

டுலக்ஸை இந்தியாவில் தயாரித்து விற்பவர்கள்:
தி ஆல்கலி அண்ட் கெமிகல் கார்ப்பரேஷன் ஆப்
இந்தியா லிமிடெட்.




டுலக்ஸ்—வீட்டின்
நெருங்கிய நண்பன்